திருப்பாதம்

# ஞானசம்பந்தம்

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 ] சாதாரண ஆண்டு ஐப்பசித்திங்கள் 10-11-70 [ இதழ் 12





ஸ்ரீ செந்திலாண்டவன்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

சத்துருவும் மித்துருவும்
தாரணியில் வேறில்லை
சத்துருவும் மித்துருவும்
தன்னெஞ்சே—பெத்தமலம்
விட்டும் படிக்கு
விலக்கி டுனைத்தருவோ(ன்)
ஆட்டுஞ் சிவனென்
றறி. (93)

ஆசிரியர்:

வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர்:

மகாவித்துவான்
அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 | 10-11-70 | இதழ் 12

## உட்பொருள்



| எண் | | பக்கம் |
|---|---|---|
| 1 | ஸ்ரீ மெய்கண்டார் | ... 643 |
| 2 | தோத்திரமும் சாத்திரமும் | ... 647 |
| 3 | திருவருட்பயன் விளக்க உரை | ... 652 |
| 4 | காசியில் கண்ட கண்கொள்ளாக் காட்சி | ... 656 |
| 5 | "கொழிதமிழ்க்கூடலில் கொன்றை வேணியான்" | ... 659 |
| 6 | இறைவனுக்கு எண்ணமென்ன | ... 663 |
| 7 | எண்ணிய எண்ணங்கள்! சொல்லாத சொற்கள்! | ... 665 |
| 8 | அக்னி | ... 674 |
| 9 | திருமந்திரம் குறிப்புரை | ... 677 |
| 10 | திருவையாற்றுப் பதிற்றுப்பத் தந்தாதி | ... 681 |
| 11 | செய்திகள் | ... 685 |
| 12 | எதிர்காலம் | ... 689 |
| 13 | ஞானக்களிற்றின்முன் மானக்களிறு மாண்புற்றது | ... 692 |

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

தருமை ஆதீனத்திலிருந்து மாதந்தோறும் வெளிவரும் "ஞானசம்பந்தம்" இம்மாத இதழோடு இருபத்தொன்பது ஆண்டு நிறைவைப் பெறுகிறது.

இதுவரை, தமிழுலகிலும் தமிழர்வாழும் கடல் கடந்த நாடுகளிலும் சமயத்துறையில் ஒரு விழிப் புணர்ச்சியை உருவாக்கியது ஞானசம்பந்தம் என்பதை அனைவரும் அறிவர்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்களின் அருளுரை. புத்தம்புதிய சமய, இலக்கிய, இலக்கணக் கட்டுரை கள், செய்திகள், எதிர்காலம் முதலியவற்றுடன் படிப்பவர் பயனுறும் வகையில் வெளிவரும் ஞானசம்பந்தம் இதழைத் தொடர்ந்து அன்பர்கள் வாங்கி ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

30—11—70 ஆம் தேதியுடன் ஞானசம்பந்தம் இதழின் ஆண்டு முடிவுறுவதால் தனி அறிவிப்பை எதிர்பாராமல் பழைய சந்தாதாரர்கள் மீண்டும் தொடர்ந்து ஆண்டுக் கட்டணம் செலுத்தியும் புதிய சந்தாதாரர்களாகச் சேரவிரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு ஆண்டுக்கட்டணம் அனுப்பியும் "ஞானசம்பந்தம்" இதழைப் பெற்றும் கற்றும் பயனுறுவார்களாக.

ஆண்டுச் சந்தா

உள்நாடு ரூ. 3—00 வெளிநாடு ரூ. 4—00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:

செயலாளர்
ஞானசம்பந்தம் காரியாலயம்,
தருமையாதீனம்
தருமபுரம், மாயூரம் P. O.

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 29 | சாதாரண - ஐப்பசி - 10—11—70 | இதழ் 12

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே, — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்



## ஸ்ரீ மெய்கண்டார்

" பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன் அருள் மேவும்நாள் எந்நாளோ "

—தாயுமானார்.

அரசியல் ஆட்சிமாற்றம் காரணமாக அவ்வப்போதும் நாட்டில் கொள்கைக் குழப்பங்களும், சமயநெறிக் குழப்பங் களும் தோன்றி வந்துள்ளன என்பதை வரலாறு நமக்கு உணர்த்துகிறது. இம்முறையில் தமிழகத்தில் கி. பி. 2 ஆம் நூற்றாண்டு முதல் 6 ஆம் நூற்றாண்டின் இறுதிவரை குழப்ப

காலமாகவே இருந்திருக்கிறது. சமய, சமுதாய, அரசியலில் வளர்ச்சி இல்லை. இலக்கிய வளமில்லை. இதனால் இக் காலத்தை வரலாற்றுத் துறையினர் இருண்டகாலம் என்று குறிக்கின்றனர். இருண்டகாலத்தின் முடிவில் ஒண்கதிரென வும், தண்மதி எனவும் தமிழகத்தில் தோன்றியவர்களே சமய குரவர்களுள் முதல்வர்களான திருஞானசம்பந்தரும், திரு நாவுக்கரசருமாவார்கள். அவ்விருவரும் ஏழாம்நூற்றுண்டில் சுடர்கூட்டி ஏற்றிவைத்த சிவநெறி விளக்கு 12 ஆம் நூற்றுண்டு வரை ஒளிவளர் விளக்காகச் சுடர்விட்டுப்பிரகாசித்தது. சைவ நெறி காக்க, தக்க ஆசாரியர்கள் இல்லாத காரணத்தால் மீண்டும் குழப்பம் தலையெடுக்கத் தொடங்கியது. வியாசர் அருளிய பிரம்மசூத்திரப் பேருரையால் சைவநெறிபற்றிக் குழப்பம் ஏற்பட்டது.

அப்போது 13 ஆம் நூற்றுண்டில் ஞானக்கதிரவன் எனத் தோன்றியவரே ஸ்ரீ மெய்க்ண்டதேவர். இவர் நிறுவனங் களின் மூலம் தக்க தலைவர்களை வளர்த்து அவர்களின் வாயிலாக வழிவழியாகச் சிவநெறியை வளர்த்தலே என்றும் நலம் விளைக்கும் எனக்கண்டவர். அவ்வண்ணமே தாம் ஞான பிதாவாக இருந்து குருபுத்திரசிரோமணிகள் நாற்பத்தொன் பதின்மரைத்தோற்றுவித்து அவர்கட்குச் சிவஞானபோதத்தை உபதேசித்து அவர்கள் வழியாகச் சிவநெறியைத் தர்க்க நூல் முறைக்கும், விஞ்ஞான முறைக்கும் மாறுபடாமல் வளரச் செய்தார்.

அவர் நிறுவிய நிறுவனங்கள்தான் தமிழகத்தில் உள்ள சைவ ஆதீனங்கள். இவ்வாதீனங்கள் பதினெட்டு எனக் கணக்கிடப்பட்டுள்ளன. இவற்றின் சைவத் தமிழ்ப் பணிகளால்தான் கொள்கைக் குழப்பம் இன்றி, சிவநெறி இன்றும் தெளிவுடன் செழிப்புற்று மக்களிடையே வளர்ந்து மக்களை மக்களாக வளர்த்துவருகிறது. இவ்வளவு பெருமைக்கும் உரியவராகிய ஸ்ரீ மெய்கண்டதேவரின் குருபூசைத் திருநாள் ஐப்பசிமாதம் 13 ஆம்நாள் 30—10—70ல் பெண்ணாகடத்திலும், திருவெண்ணெய்நல்லூரிலும் சிறப்பாக அபிஷேக ஆராதனைகளுடனும், அன்னதானத்துடனும் கொண்டாடப்பட்டது. நமது சென்னை சமயப்பிரசார நிலையத் திலும், சைவ சித்தாந்த மகாசமாஜத்திலும் தத்துவ விளக்கம்

செய்வதன் வாயிலாகக் கொண்டாடப்பட்டது. இருப்பினும், அவர் செய்துள்ள நன்மையை எண்ணும்போது நாம் கொண்டாடுவது குறைவாகவே காணப்படுகிறது. விழாக் கொண்டாடுவதால் அவருக்கு ஒரு நன்மையும் இல்லை. கொண்டாடுகிற நாம்தான் நன்மை அடைகிறோம்.

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மை யெல்லாம்
[ தொழவேண்டி"

என்ற மணிவாசகர் மணிமொழியையும்,

"பொன்னாற் பிரயோசனம் பொன் படைத்தாற் குண்டு
பொன்படைத்தோன்
தன்னாற் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டு அத்
தன்மையைப்போல்
உன்னாற் பிரயோசனம் வேணதெல்லாம் உண்டு
உனைப்பணியும்
என்னாற் பிரயோசனம் ஏதுண்டு காளத்தி
ஈச்சுரனே"

என்ற பட்டினத்தடிகளின் பணிமொழியினையும் உணர்வார்க்கு இவ்வுண்மை இனிது விளங்கும். ஸ்ரீ மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்தைப்பற்றி காலஞ்சென்ற திரு. * கா. மு. சுந்தர முதலியார் எழுதியிருப்பதைக் காண்போமாக.

"இச்சிவஞானபோதம், சிவபெருமான் திருக்கரத்துட் கொண்டது. நந்திதேவருக்கும் சனகாதிகளுக்கும், மாணிக்க வாசக சுவாமிகளுக்கும், உபதேசிக்கப்பெற்றது. சிறந்த சைவ சித்தாந்த ஞான முழுமுதல் நூலாய் விளங்குவது. விரிந்த பொருள்களை உடையது. எந்நூற்களிலும் இல்லாத மேலான விஷயங்களைத் தன்னகத்துட் கொண்டது. பன்னிரண்டு (12) சூத்திரங்களையுடையது. நாற்பது (40) அடிகளுடையது.

---

* காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனத்தில் இப்பொழுது குருமகாசந்நிதானமாக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசதேசிக சுவாமிகள் அவர்களின் பூர்வாச்சிரமத்தந்தையாராவார்.

இருநூற்றுப்பதினாறு (216) சொற்களுடையது. அச்சொற்களுள் அறுநூற்று இருபத்துநான்கு (624) எழுத்துக்கள் பெற்றது. ஒவ்வொரு வீட்டிலும் பூசித்துப் போற்றப்படுவது. ஒவ்வொருவரும் படித்துச் சிந்தித்துத் தெளிந்து முடிவான அத்துவித முத்தியைப் பெறுதற்குரியது. சிவஞான சுவாமிகளால் சிற்றுரையும் பேருரையுமாகிய மாபாடியமும் எழுதப் பெற்றது. எவர்களாலும் மறுக்கப்படாதது. எச்சமய நூல்களுக்கும் அரசாய் விளங்குவது ''

மெய்கண்டார் அவதாரத் தலமாகிய பெண்ணாகடத்தில் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாருக்கு 15—11—70ல் சைவ ஆதீனங்களின் ஆதரவுடனும், மெய்கண்டார் மரபினரின் ஒத்துழைப்புடனும், சைவ மெய்யன்பர்கள் உதவியுடனும் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் முப்பொருள் மாநாட்டுடன் சிறப்பாக நடைபெற இருப்பதைக்கண்டு தரிசித்துக் கடமை உணர்ந்து நடப்போமாக.



---

## இறைவன் திருவடிகள்

இறைவனது திருவடிகள் இரண்டனுள் வலது திருவடி அறிவுடைய பொருள். அறிவில் பொருள்களையெல்லாம் ஒருவர் அறிவிக்கவேண்டாது தானே அறியும் அறிவாகிய முற்றறிவாக விளங்குவது. இடது திருவடி அந்தப் பொருள்களையெல்லாம் செயற்படுத்தும் முற்றுத் தொழிலாக விளங்குவது. எனவே அவரது முற்றறிவே ஒரு திருவடி என்பதும், முற்றுத் தொழிலே மற்றைத் திருவடி என்பதும் உணர்க. மாணுக்கன் அறிவு, செயல் விளக்கமுறுதற்குத்தான் திருவடி தீட்சை ஏற்பட்டுள்ளது.

— சிவஞானபோதம்.

---

உ

குருபாதம்

குருவருள்

# தோத்திரமும் சாத்திரமும்

## நீறணி அண்ணல்

திருமுறைகள் சிறப்பாக எடுத்தோதும் சிவபெருமானது திருக்கோலங்களுள் முதன்மை வாய்ந்தது நீறணி கோலம். தவத்தோர் கண்ணிற்கன்றி நம்மனோர் கண்ணிற்குக் காணப் படாத சிவபெருமான், நம்மனோர் கண்ணிற்குக் காணப்படும் திருவடிவமே அவனது அடியவரது வேடங்கள். அதனால், சிவபெருமான் எந்த எந்தக் கோலங்களை உடையனாய் இருக் கின்றானோ அந்த அந்தக் கோலங்களையே அவன் அடியார் களும் உடையவர்களாய் இருக்கின்றார்கள். அவ்வடியவர்கள் அனைவரும் முதன்மையாக இன்றியமையாது மேற்கொள்வது திருநீற்றுப் பூச்சு. 'திருநீறு மிக வெண்மையாய் இருத்தல் வேண்டும்' என்பதும், 'செந்நிற நீறு, நீலநிற நீறு - இவற்றை அணிதல் கூடாது' என்பதும் சிவநெறிக் கட்டளை கள். 'அடியார்கள் அணிந்துள்ள வெள்ளிய திருநீறு, அவர் களது உள்ளம் மாசற்று விளங்கும் தூய்மையையும் காட்டுவ தாகும்' என்பதைச் சேக்கிழார்,

"பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்"

என்பதனால் விளக்குகின்றார். எனவே, சிவபிரான் அணிந் துள்ள திருநீறும் மிகவெள்ளிதாய் இருத்தல் நன்கறியப்படும்.

'சிவபிரான் அணிந்துள்ள திருநீறு வெள்ளிய திருநீறு' என்பதை விளக்கவே அதனைத் திருஞானசம்பந்தர் பல இடங் களில் 'வெந்த நீறு' எனக் குறிப்பிடுகின்றார்.

"வெந்த சாம்பல் விரைஎனப் பூசியே" *

---

* திருமுறை — 3. 54. 3.

" வெந்த நீறணி மார்பில் தோல்புனே
அந்த மில்லவன் "[1]

" வெந்த நீற்றினர் வேலினர் நூலினர் "[2]

என்பனபோல்பவை அறியத்தக்கன.

நன்கு வெந்த சாம்பலே வெண்மை நிறம் உடையதாகும். அரைகுறையாக வெந்த சாம்பல் கருமை, செம்மை முதலிய பிற நிறங்களே உடையதாய் இருக்கும். ஆகவே, 'வெந்த சாம்பல்' என்பது 'நன்கு வெந்து வெள்ளிதாய்த் தோன்றுகின்ற நீறு' என்பதாகின்றது. இந்த வெந்த நீற்றினே ஞானசம்பந்தர் தமது முதல் திருப்பதிகத்திலே "சுடலேப் பொடி" என்று குறித்தருளினுர். பின்னும் அவ்வாறு கூறியுள்ள இடங்கள் பல. அவற்றுள் ஓரிடத்தில் அவர் வெண்ணிற்றுடன் வேறு சிலவற்றையும் இயைபுபடச் சேர்த்து அருளிச்செய்துள்ளார்.

" சுடுநீறணி அண்ணல்சுடர் சூலம்அனல் ஏந்தி
நடுநள்ளிருள் நடமாடிய நம்பன் "[3]

என்பதே அது.

இங்கும் சிவபெருமானே "நீறணி அண்ணல்" எனக் குறிப்பிடுகின்ற அவர், நீற்றை, "சுடுநீறு" என எடுத்தோதுகின்றுர். இதனேடு சிவபெருமான், சுடர்விடுகின்ற சூலத்தினேயும், நெருப்பையும் ஏந்தியுள்ளவற்றையும் குறிப்பிட்டு, நள்ளிருளில் – எல்லா உயிர்களும் உறங்கிக்கிடக்கின்ற பாதி இரவில் நடனம் ஆடுதலேயும் கூறியருளினுர். 'சிவபெருமான் நள்ளிருளில் நடனமாடுதல் சுடுகாட்டிலே' என்பது நன்கறியப்பட்டது. ஆகவே, சுடுநீற்றையணிந்து, சுடர் சூலத்தையும், நெருப்பையும் ஏந்தி, நள்ளிருளில் சுடலேயில் ஆடுவதைக் கூறிய கருத்து யாது என நோக்குதல் வேண்டும். இவை அனேத்துமே உலகு அனேத்தையும் ஒடுக்கிநிற்கும் நிலேயைக் குறிப்பனவாய் இருத்தல் அறியத்தக்கது.

---

[1] திருமுறை — 2. 112. 8. [2] திருமுறை — 1. 56. 10.
[3] திருமுறை — 1. 15 4.

சுடுநீறு - வெந்த நீறு, எல்லாப் பொருள்களும் தமது காரிய நிலையின் நீங்கிக் காரண நிலையில் ஒடுங்கிநிற்கும் நிலையைக் குறிப்பதாகும். பல்வேறு வடிவில் காட்சியளிக்கின்ற உலகு அனைத்திற்கும் முதற் காரணமாய் நிற்பது மாயை. அஃது இறைவனையே நிலைக்களமாகக்கொண்டு நிற்பது. மாயை உலகிற்கு வித்து என்றால், இறைவன் அவ்வித்து நிற்றற்கு நிலைக்களமாய் உள்ள நிலமாகின்றான் என்பதையே, வெந்த சாம்பலைச் சிவபிரான் தனது மேனியில் பூசிநிற்கும் கோலம் விளக்குவதாகும். சிவபெருமான் மாயைக்கு நிலைக்களனாய் நிற்றலை மெய்கண்டார்,

" வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால்—வித்தகமாம் "

என்று விளக்கினார். ஆகவே, சிவபெருமான் நீறணி நிமலனாய் நிற்றல் உலகம் எல்லாம் ஒடுங்கியபொழுதும் தான் ஒடுங்காது நின்று, ஒடுங்கிய அனைத்திற்கும் பற்றுக்கோடாதலையே விளக்குவதாம்.

இந்த நீற்றுக்கோலத்துடன் சுடர்விடு சூலமும், நெருப்பும் அப்பெருமான் அனைத்து உலகத்தையும் ஒடுக்கவல்ல ஆற்றல் உடையனாதலையே குறிக்கும். சூலம் முதலிய படைக்கலங்கள் யாவும், அழிக்கும் ஆற்றலைக் குறிக்கும் அடையாளங்களே. சூலம் ஒளிவீசி நிற்பது. அனைத்தையும் எளிதில் ஒடுக்கவல்ல வன்மையைக் குறித்தலோடு, அப்பெருமானது ஆற்றல் அறிவே வடிவமாய் நின்று, அறியாமையாகிய இருளைப் போக்கும் திறத்தையும் தெரிவிக்கும் இச்சூலாயுதம் மூன்று இலைவடிவாய் நிற்பது, இறைவனது ஆற்றல் 'இச்சை, ஞானம், கிரியை' என மூன்று வகையாய் நின்று செயலாற்றுதலைக் குறிக்கும்.

" சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞான மாகும் "

" ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியைஎன் றொருமூன் றாகி
நின்றிடும் சத்தி "

என்னும் சிவஞான சித்தியால், சத்தி அறிவே வடிவாதலும், அஃது இச்சை, ஞானம், கிரியை என மூன்றாய் நிற்றலும்

அறியப்படும். "சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்" என்ற உண்மை விளக்கத்தால், சிவபிரானது கையில் உள்ள நெருப்பு, அவனது அழிக்கும் ஆற்றலை இனிது விளக்குதல் உணரப்படுகின்றது.

இனி, அவன் நள்ளிருளில் சுடலையில் நடனம் ஆடுதல் என்பது, உலகம் எல்லாம் ஒடுங்கிய முற்றழிப்புக் காலத்தில் ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுவித்தற்கு ஆவனவற்றைப் புரிதலையே குறிக்கும். நள்ளிருளில் ஒருவன் நடனம் ஆடினுல், அதைப் பார்ப்பவர் யார்? ஒருவரும் இல்லை ஆனுல், அவனேடு ஒத்த அவன் தேவி இருக்கின்ருள். அவள் ஒருத்தியே அவனது நள்ளிருள் நடனத்தைக் காண்பவள். இதனை அப்பர் பெருமான், "இவர் ஆடுமாறும், இவள் காணுமாறும் இதுதான் இவர்க்கொர் இயல்பே" என்று அருளிச்செய்தார். எனவே, மேற்காட்டியவாறு,

"சுடுநீறணி அண்ணல்சுடர் சூலம்அனல் ஏந்தி
நடுநள்ளிருள் நடமாடிய நம்பன்"

என ஞானசம்பந்தர் விரித்தோதியருளியது, சிவபெருமானது எல்லாம் வல்ல தன்மையை விளக்கி நிற்பதாகின்றது.

ஒரு பொருளை ஆக்குதல், காத்தல் என்பவற்றிலும் அழித்தற்கே அப்பொருளின் மிக்க ஆற்றல் வேண்டப்படுவதாகும். அதனுல், எல்லாவற்றையும் ஒடுக்குதல் ஒன்றே அவன் எல்லாப் பொருளினும் மேலான ஆற்றல் உடையவன் என்பதை இனிது விளக்குவதாம். எல்லாம் ஒடுங்கியபின் மீள அவற்றைத் தோற்றுவித்தற்குப் பிறர் ஒருவரும் இல்லாமையால், அவற்றை மீளத் தோற்றுவிப்பவனும் அவனேயாகின்ருன். ஆக்கலும் அழித்தலும் வல்லவன் என்பது அறியப்படவே, காப்பவனும் அவனேயாதல் தானே விளங்குவதாம். ஆகவே, "ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்" என்று மாணிக்கவாசகர் அருளிச்செய்தவாறு, சிவபிரான் ஒருவனே எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாதல் இனிது பெறப்படுகின்றது.

ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததென்று மொழியலாம் — ஈசனே

ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானுனல்
நோக்குவதென்! யாம்பிறரை நொந்து.

(சிவபோகசாரம்)

என்று ஆதி பரமாசாரியரும் அருளிச்செய்தார். இத்துணை உண்மைகளேயும் விளக்குவனவே, "காடுடைய சுடலைப் பொடி பூசி" என்றும், பிறவாறும் சிவபெருமானது நீறணிந்த திருக்கோலத்தைப் புகழ்ந்து கூறும் திருமுறைப் பாடல்கள்.

வெண்ணீறு இறைவனது இத்தகைய பேராற்றலை விளக்கிநிற்பது ஆதலாலும், அப்பேராற்றலே இறைவனது திருவருள் ஆதலாலும் திருவெண்ணீறு இறைவனது திருவருள் வடிவமேயாம். அதுபற்றியே, 'திருநீறே எல்லாம் செய்ய வல்லது' என்பதைத் திருஞானசம்பந்தர் தமது திருநீற்றுப் பதிகத்துள், "மந்திரமாவது நீறு, தந்திரமாவது நீறு, வெந்துயர் தீர்ப்பது நீறு முத்தி தருவது நீறு, சித்தி தருவது நீறு. பத்திதருவது நீறு, வருத்தம் தணிப்பது நீறு, வானம் அளிப்பது நீறு, அருத்தமதாவது நீறு, அவலம் அறுப்பது நீறு, ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு" என்றெல்லாம் பலவகையாக விரித்து, "பராவண மாவது நீறு" என்று ஒருவார்த்தையாகத் தொகுத்தும் அருளிச்செய்தார். பரா - பரை; பராசத்தி; இறைவன் திருவருள். பரா வண்ணம் ஆவது நீறு - பரம சிவனது ஆற்றலாகிய பராசத்தி வடிவமாய் விளங்குவது திருநீறு. என்ருல், அஃது எதைத் தான் செய்யமாட்டாது! இவ்வுண்மையை ஞானசம்பந்தர் சொல்லளவில் சொல்லிப்போகாமல் அத்திருநீற்றைக் கொண்டே பாண்டியனது வெப்பு நோயை நீக்குதல் முதலிய அதி அற்புதச் செயல்கள் பலவற்ருல் கண்கூடாக விளங்கச் செய்தும் காட்டினுர். ஆகவே, "நீறணி அண்ணல், சூலம் அனல் ஏந்தி நள்ளிருள் நடமாடும் நம்பன்" என்ருற்போல வரும் திருமுறைத் தோத்திரங்களின் உண்மைப் பொருள்கள் மேற்கூறியவாறு சாத்திரங்களைக்கொண்டே உணர்தற்கு உரியனவாம். அவ்வாறு உணரும்பொழுதே சிவசின்னங்களாகிய திருநீறு முதலியவற்றில் அன்பும் ஆர்வமும் பெருகி, அவற்றின்வழிப் பயன் அடையச்செய்யும் அத்தகைய ஆர்வத்தைச் சாத்திர உணர்வின்வழி மக்கள் பெற்றுப் பயன் அடைவார்களாக.

# திருவருட்பயன் விளக்க உரை

(மலர் 29, இதழ் 11, பக்கம் 594 இன் தொடர்ச்சி)

எட்டாவது குறள்,

" எங்கு மெவையு மெரியுநீர் போலேகந்
தங்குமவன் ருனே தனி "

எனவரும்.

இதன் பொருள்: அவன் - அடியாரிடத்து விளங்கியும் ஏனையோரிடத்து விளங்காதும் நிற்கின்ற அவ்விறைவன்; எங்கும் - எல்லா இடங்களிலும்; எவையும் - அவ்விடங்களில் உள்ள அறிவுடைப் பொருள், அறிவில் பொருள் என்னும் எல்லாப் பொருள்களிலும்; நீர் உறு எரிபோல் - காய்ச்சப்பட்ட நீரில் பொருந்திய வெப்பம்போல்; ஏகம் தங்கும் – ஒன்ருய் வேறற நிற்பான். தான் தனியே - ஆயினும் அவன் தான் அவற்றுள் ஒன்ருகாது. வேருகியே நிற்பான்.

விளக்கம்: எனவே, 'அகர உயிர்போல் எங்கும் எப் பொருளிலும் கலப்பினுல் ஒன்ருய் நிற்கின்ற இறைவன், அப்பொழுதே நீரில் கலந்து நிற்கின்ற வெப்பம்போலப் பொருள் தன்மையால் வேருயும் நிற்பானுகலின், அப்பொருள் களின் தன்மையைத்தான் எய்துவானல்லன்' என்றவாருயிற்று.

'இறைவன் உலகத்தொடு பொருந்தி நிற்கும் தொடர்பு இவ்வகையது என்பதைக் குறிப்பதே, 'அத்துவிதம்' என்னும் சொல்' என்பதும், 'அச்சொல், ஒன்ருதல், வேருதல், ஒன்றும் வேறுமாதல் என்னும் மூன்றற்கும் பொதுவாய் நிற்கும் நிலையையே பொருளாக உடையது' என்பதும், 'கடவுள் அத்துவிதப்பொருள்' என்று உபநிடதங்களில்கூறப்படுதலால், இறைவன் உலகத்தோடு ஒருவகையில் ஒன்ருயும், மற்ெருரு வகையில் வேருயும், பிறிதொரு வகையில் உடனுயும் நிற்றல் அறியப்படும்' என்பதும், ஒன்ருய் நிற்றல் கலப்பினுலும், வேருய் நிற்றல் பொருள் தன்மையாலும், உடனுய் நிற்றல் உயிர்க்குயிராதல் தன்மையாலுமாம்' என்பதும் மெய்கண்ட

தேவரால் சிவஞானபோதத்துள் உணர்த்தப்பட்டன. அவற்றுள் கலப்பினுல் ஒன்ருதற்கு, 'உடலில் நிற்கும் உயிர்போல்' என்னும் உவமையும், பொருள் தன்மையால் வேருதற்கு, 'கண்ணெளியோடு கலந்து நிற்கும் ஞாயிற்றின் ஒளிபோல்' என்னும் உவமையையும், உயிர்க்குயிராதல் தன்மையால் உடனுதற்கு, கண்ணெளியோடு கலந்துநிற்கும் ஆன்மபோதம் போல்' என்ற உவமையையும் இவ்வாசிரியர் தமது சிவப்பிரகாசநூலுள் ஒரு செய்யுளிலே தொகுத்துக் காட்டினுர். இந்நூலுள் 'அகர உயிர்போல்' என்றஉவமையை ஒன்ருதற்கும், 'நீருறு எரிபோல்' என்ற உவமையை வேருதற்கும், இங்குக் காட்டினுர். இதனுனே, "நீருறு தீயே" *என்ற திருவாசகத்திற்கும் இதுவே கருத்தாதல் அறிந்து கொள்ளப்படும். உடனுதற்கு, தாடலேபோல் என்ற உவமையைப் பின்னர்க் கூறுவார்.

இறைவன் கலப்பினுல் ஒன்ருதலாவது, உயிர் உடலில் நின்று அதனை நிலைபெறுவித்தல் போலச் சடமும் சித்துமாய பொருள்களில் நின்று அவை அவ்வத்தன்மை உடையனவாக நிலைபெறுவித்தலாம். வேருதலாவது அவை அவ்வாற்ருல் இயக்கப்படுவனவாகத் தான் இயக்குவோ னுகியே நிற்றலாம். அதனுல் அவற்றின் தன்மை தனக்கு எய்தாமையும் பெறப்படும். உயிர்க்குயிராதல் தன்மையால் உடனுதலாவது, உயிர் ஒன்றனை அறியுமிடத்துத் தானும் அதனேடு உடன் சென்று அறிதலாம். இஃது அறிவுடைப் பொருட்கே சிறந்து நிற்றல்பற்றி இதனை உயிரிடத்து மட்டுமே வைத்துக் கூறுவர். எனினும், ஏனைச் சடப் பொருள்களின் தொழிற்பாட்டிலும் அவன் அவ்வாறு இயைந்து நிற்றல் வேண்டும் என்க.

உயிரால் உடல் நிலைபெறுவதாயினும் உயிர் வேருக அறியப்படாதுஉடலேயாய் எண்ண நிற்றலாலும், அகரஉயிரால் ஏனை எழுத்துக்கள் நிலைபெறுவவாயினும் அகரம் வேருக அறியப்படாது ஏனை எழுத்துக்களாகவே எண்ண நிற்றலாலும் அவையிரண்டும் இறைவன் கலப்பினுல் உலகமேயாய் நிற்றற்கு உவமையாகக் கொள்ளப்பட்டன ஞாயிற்றின்ஒளி கண்ணெளியில் ஒன்ருய்க் கலந்து நிற்பினும், கண்ணெளி

* கோயில் திருப்பதிகம் 7, 8, 74.

பொருளைக் காண்பதாயும், கதிரொளி கண்ணிற்குப் பொருளைக் காட்டுவதாயும் நிற்கும் தன்மையால்வேறுபட்டு நிற்றலாலும், நீரிற் பொருந்திய வெம்மை அதனேடு ஒன்ருய்க் கலந்து நிற்பினும், சுடுந்தன்மையால் தனது தன்மை அதனின் வேருய் அறியப்படுதலாலும் அவை இறைவன் உலகுயிர்க ளோடு ஒன்ருய்க்கலந்து நிற்பினும், தன்மையால் வேருய் நிற்றற்கு உவமையாகக் கொள்ளப்பட்டன. கதிரொளி கண்ணெளியிற் கலந்து நின்றதாயினும், பொருள்களைக் காண்கின்ற காட்சி வேறுபாடுகள் கண்ணுக்கன்றிக் கதி ரொளிக்கு இல்லாமையும், வெப்பம் நீரில் பொருந்தியதாயி னும் 'நாழி' என்றும், 'நானுழி' என்றும் இவ்வாறு அளக்கப்படுதலும், கழுவப்படுகின்ற பொருளின் மாசுகளை உடைத்தாதலும் போலும் தன்மைகள் வெம்மைக்கு இல்லா மையும் கருதற்பாலன.

இவ்வாறு ஒன்ருய்சிற்றல், வேருய்நிற்றல், உடனுய் நிற்றல் என்னும் மூன்று தனமையும் ஒருங்கே தோன்ற நிற்கும் தன்மையே அத்துவிதம் என்க. இந்நிலையை மெய் கண்ட தேவருக்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்பே திருஞான சம்பந்தர் தமது திருவீழிமிழலைத் தேவாரத்துள்,

''ஈருய்முதல் ஒன்ருய்இரு பெண்ணுண்குணம் மூன்ருய்
மாருமறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய்
ஆருர்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தானுய்
வேருய் உடனுனன்இடம் வீழிம்மிழலையே'' †

என்று அருளிச்செய்தார்.

ஒன்ருதல் முதலிய மூன்றனையும் பிற சமயத்தார் பிற உவமைகளால் பிறவாறு கூறுவர். அவையாவன: 'பொன் னும் பணியும்போல இறைவன் உலகத்தோடு ஒன்ருயிருப்பன்' என்று ஒருசாரார் கூறுவர். இவர் 'அத்துவிதம்' என்பதற்கு, 'ஒன்று' என்பதே பொருள் என்பர். மற்றை இரண்டனை யும் இவர் கொள்ளார். இவர் 'ஏகான்மவாதிகள்' எனப் படுவர். 'இறைவனும், உலகமும் வேறல்ல' என்பதனுல் இவர் கூற்று, 'அபேத வாதம்' எனப்படும். 'இறைவனும்,

---

† திருமுறை, 1. 11. 2.

உலகமும் பொன்னும் பணியும்போல்வன' என்ருல், இறைவன் தன்மையே உலகிற்கும் உளதாதல் வேண்டும். ஏனெனில், பொன்னின் தன்மைதானே பணிகளிற்காணப்படுதலால். அல்லது உலகின் தன்மையையே இறைவனும் உடையனுதல் வேண்டும். இருபொருளும் பெரிதும் வேறுபட்ட உயர்வு தாழ்வுகளே உடையன என்பது நன்கறியப்பட்டது. அதனுல், ஏகான்மவாதிகளது அபேதவாதம் பொருந்தாததாகின்றது.

அபேதவாதம் பொருந்தாமை பற்றி, இருளும், ஒளியும் போல இறைவனும் உலகமும் வேறு வேறேயாம் என்பர் மற்ருெருசாரார். இவ்வாறு இயைபில்லாமை தோன்றக் கூறுதலால் இவர் கூற்றுப் 'பேதவாதம்' எனப்படுகின்றது. இவர், 'அத்துவிதம்' என்பதற்கு 'இரண்டு' என்றே பொருள் கொள்வர். ஏனே இருவகைகளேக் கொள்ளார். அதனுல், இவர் 'துவித வாதிகள்' எனப்படுகின்றனர். இறைவனும், உலகமும் ஒளியும், இருளும்போல ஆகிவிடின், இரண்டிற்கும் இயைபின்றி ஒழிய, இறைவனுல் உலகிற்கு யாதொரு பயனும் இல்லேயாய்விடும். அதனுல் பேதவாதமும் பொருத்தம் அற்றதாகின்றது.

இவை இரண்டும் பொருந்தாதொழிதலின், 'சொல்லும், பொருளும்போல, இறைவனும் உலகமும் ஒன்றும், வேறுமாவர்' என்பர் பிறிதொரு சாரார். இவர், 'அத்துவிதம்' என்பதற்கு இஃதொன்றனேயே பொருளாகக் கொள்வர். ஏனே இரண்டையும் கொள்ளார். இதனுல் இவர், 'பேதாபேத வாதிகள்' எனப்படுகின்றனர். சொல்வேறு, பொருள்வேறு ஆதலின் அவை ஒன்ருமாறு இல்லே. அதனுல் அவ்வுவமை பொருளற்றதாகலின், அதுகொண்டு நிறுவப்படும் பொருளும் நிலேபெருதாம். ஆகவே, பேதாபேத வாதமும் பொருந்துவது அன்ரும். எனவே 'இறைவன் அத்துவிதமாய் உள்ளான்' என்பதற்கு மேற்கூறப்பட்ட பொருளே பொருந்துவதாதல் அறிந்துகொள்க.

இதனுல், இறைவன் உலகத்தொடு ஒன்ருயும், வேருயும் நிற்றல் கூறிய முகத்தால் அவன், எல்லாப் பொருளிலும் நிறைந்துநின்றே, அவற்றில் தோய்வின்றித் தூயனுய் நிற்றல் கூறப்பட்டது.

# காசியில் கண்ட கண்கொள்ளாக் காட்சிகள்

**வித்துவான். திரு. ப. வடிவேல் பிள்ளை**

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம், இறைவன் திருவருளும் குருவருளும் மிகவும் பெற்ற 25ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் 19—6—59 வெள்ளிக்கிழமை திருக் கயிலாய யாத்திரை சென்ற அந்நாளிலேயே 19—6—70 வெள்ளிக்கிழமை காசியாத்திரையையும் தொடங்கினார்கள்.

திருக்கயிலாய யாத்திரை எல்லோருக்கும் எளிதில் கிடைத் தற்கு உரியதன்று. ''யான்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்'' என்பதற்கேற்ப ஒப்பதும் மிக்கதும் இன்றி அரு ளாட்சி புரிந்துவரும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுடன் அன்பர்கள் பலரும் ஆதீன அடியார்களுமாக 34 பேர்கள் சென்றோம். குளிர்பதனப் பெட்டியில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் செல்லும்போதெல் லாம் அவ்வப்போது தேவார இன்னிசையையும் கயிலைக் குருமணி அவர்களின் உபதேசமொழிகளையும் கேட்டுக்கேட்டு எல்லையில்லா இன்பம் எய்தினோம். 20—6—70 சனிக்கிழமை இட்டார்சியில் வண்டி மாறினோம். 21-6—70 ஞாயிற்றுக் கிழமை அலகாபாத் சென்று திரிவேணி சங்கமத்தில் கயிலைக் குருமணி அவர்களோடு புனித நீராடி காசிக்குப் போனோம். அங்குத் தங்கிஇருந்த 10 நாட்களிலும் எங்களுக்கு நிகழ்ந்த உபசாரங்கள் சொல்லில் அடங்கா. இதுபற்றி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு நாங்கள் எல்லோரும் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றோம்.

22-6—70 திங்கட்கிழமை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் காசியில் உள்ள 64 கட்டங்களுக்கும் எங்களைப் படகில் அழைத்துச்சென்றார்கள். செல்லும்போதெல்லாம் தேவார இன்னிசைகளும், அருளுபதேசங்களும் நிகழ்ந்தன.

23—6–70 செவ்வாய்க்கிழமை காசி விஸ்வநாதருக்கு கயிலைக் குருமணி அவர்கள் மிகச் சிறந்தமுறையில் அபிடேக ஏற்பாடு செய்திருந்தார்கள். அன்று பாற்கடலில் மூழ்கி இருந்த விஸ்வநாதரைக் கண்டோமே அல்லது சாதாரண விஸ்வநாதரைக் காணவில்லை. அத்தகைய மிக உயர்ந்த திட்டத்தில் மிகமிகச் சிறப்பாக அபிடேகம் நிகழ்ந்தது.

26—6—70 வெள்ளிக்கிழமை ஒரு சிறந்த நன்னுள். அதிலும் பொன்னுள். அன்று சுமங்கலிகளுக்கு எண்ணெய் ஸ்நானத்துக்கு ஏற்பாடு செய்து அவர்களுக்குப் புத்தாடைகளும், பெண்குழந்தைகளுக்குப் பாவாடை சட்டைகளும். பிரமசாரிகளுக்கு நல்லாடைகளும் கொடுத்து மகிழ்ந்தார்கள், துறவிகளுக்குக் காவியுடையும் வெண்பொற்காசுகளும் கொடுத்து இன்புற்ருர்கள். காசிவிஸ்வநாதர் அபிடேகத்திலும் அன்னபூரணி அபிடேகத்திலும் உடன்வந்த ஒவ்வொருவரையும் அழைத்து பாலபிடேகம் செய்து மகிழும்படியான பெரும்பாக்கியத்தை எல்லோருக்கும் அளித்தார்கள். இது என்றென்றும் மறத்தற்குரியதன்று. கிடைத்தற்கரிய பெரும் பேருகும்.

27—6—70 சனிக்கிழமை பண்டாக்கள் பூசை நிகழ்ந்தது. இது பெரிதும் காண்டற்கரிய கண்கொள்ளாக்காட்சியாகும். நூற்றுக் கணக்கான துறவறம் பூண்ட சாதுக்களை அழைத்து வந்து ஆடையளித்து மாகேஸ்வரபூசை செய்து வெண்பொற்காசுகள் கொடுத்து வேண்டுமளவும் லட்டு முதலிய இனிப்புப் பண்டங்களும் அவர்கள் விருப்பத்திற்கேற்ற சிற்றுண்டிகளும் பாதாங்கீரும் கொடுத்து ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் இறுதிவரையில் உடன்இருந்து சாதுக்களை ஊட்டிய பண்பு என்றென்றும் எங்கள் உள்ளத்தை விட்டகலாது.

1—7—70 புதன்கிழமை காசிவிஸ்வநாதரிடம் பிரியாவிடைபெற்று சென்னைக்கு எழுந்தருளினுர்கள். 2—6—70 வியாழக்கிழமை முழுதும் ரயிலில் பிரயாணத்தை முடித்து 3—6—70 வெள்ளிக்கிழமை பலவித மங்கள வாத்தியம் முழங்க பல அறிஞர் பெருமக்கள் வரவேற்க சென்னை எழுந்தருளினுர்கள். காசியில் எழுந்தருளியிருந்த 10 நாட்களிலும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அதிகாலை 4 மணிக்கு கேதார கட்டத்திற்கு எங்களை முந்தி விடுவார்கள். நாங்கள்

எல்லோரும் அன்பர்கள் பலரும் கயிலைக் குருமணி அவர்களோடு எழுந்துவந்து கங்கையாடிய காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஒவ்வொரு நாளும் கங்கையாடியபோது அவர்களுக்கு முந்திய 24 குருமகாசந்நிதானங்களையும் நினைந்து நினைந்து மனம் உருகி கங்கையாடியது பல்லோரும் போற்றற்குரியதாகும். கயிலைக் குருமணி அவர்கள் இதன்மூலம் குருபக்தியில் எந்நிலையில் இருக்கின்றார்கள் என்பதை அறிவுடை உலகம் அறிந்து மகிழவேண்டும்.

அடியேனது சிவபூசைக்காக வாங்கிய ஸ்படிக லிங்கத்தை முதன் முதலில் அவர்கள் திருக்கரத்தால் அபிடேகித்து அடியேனுக்குப் பூசை தொடங்கிவைத்த அவர்களது அன்பையும் கருணையையும் அடியேன் என்றென்றும் மறக்கமாட்டேன். கயிலைக்குருமணி அவர்களின் உள்ளம் மிகத்தூய உள்ளம், கருணை உள்ளம் படைத்தவர்கள். உதாரணமாக காசியில் இருக்கும்போது இரண்டொருநாள் கதிரொளி மிகவும் கடுமையாக இருந்தது. அதைத் தாங்கமுடியாத டாக்டர் திரு. K. அரங்கசாமிப் பிள்ளை முதலியவர்கள் புகைவண்டி நிலையத்தில் இருந்த குளிர்பதனப் பெட்டிக்கு மிகமிக விரைந்தோடித் தங்கினார்கள். ஆனால் கயிலைக் குருமணி அவர்கள் மட்டும் போகவில்லை. குருமகாசந்நிதானம் என்ன எண்ணினார்களோ? என்ன செய்தார்களோ? அடுத்த நாளே தொடர்ந்து மழை பொழிந்து பூமி குளிர்ந்துவிட்டது. இது கண்கூடாகக்கண்ட சிறந்த அருட்காட்சி.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்" என்ற அமுதமொழிக்கு இலக்கியமாக விளங்குபவர்கள். இத்தகைய புனித யாத்திரை இனி என்று வாய்க்குமோ என்று அடியேன் உள்ளம் ஏங்கி நிற்கின்றது.

நாயினும் கடைப்பட்ட அடியேனையும் ஒரு பொருட்படுத்தி குடும்பத்துடன் வரும்படி அருள் புரிந்தார்கள். 4—11—69ல் என் மணிவிழாவை நடத்திவைத்த குருமகாசந்நிதானம் அவர்கள் இந்த அரியவாய்ப்பையும் எனக்கு அளித்து ஆசி கூறினார்கள். அவர்களது அன்பையும் கருணையையும் அடியேன் என்றென்றும் மறவேன்.

# " கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான் "

வித்துவான். திருமதி. ப. நீலா

( மலர் 29, இதழ் 11, பக்கம் 619 இன் தொடர்ச்சி )

## 35. தண்ணீர்ப்பந்தல் வைத்தது

கதிரோன் வழிவந்த செம்பியன் தன்னைக்காண அவாவினு னென்று அம்பொற்கதவினைத் திறந்து மீளவும் அடைத்து விடைபொறித்த மதுரைப்பரனின் ஆடல் கண்டோம். இப் போது தென்னவனின் அடுபடை நடுவண் அம்புனற்பந்தர் வைத்த அழகைக் காண்போம்.

மன்னன் இராசேந்திர பாண்டியன் ஆட்சிக் காலத்தில் காடுவெட்டிய சோழன் பகையொழித்து நட்புப்பூண விரும்பி னான். மதுரைப் பெருமானைக் களவாகவந்து தரிசிப்பது வேண்டாமல், பகலில் பலருங்காண தரிசிக்கும் பண்பை விரும்பினான். அதற்கேற்பப் பல்வேறுபட்ட கையுறைப் பொருள்களை வழுதியின் பார்வைக்குப் பரிசாக அனுப்பினான். இராசேந்திரனும் சோழனின் கருத்தறிந்து நட்புக்கரம் நீட்டி னான். அதோடு நில்லாமல் தானும் பல பொருட்களைப் பரிசி லாக அனுப்பிவைத்தான். தென்னவனின் தெளிந்த உள்ளம் கண்டு சோழன் தன்காதல் கன்னியையும் அவற்கே மணம் முடித்துக்கொடுக்க விழைந்தான்.

### மாறனின் தம்பி மருமகனானான் :-

இராசேந்திரனோடு சோழன் மணவுறவு கொள்ள விழை யும் செய்தி கேட்டான்; பாண்டியர் குலத்தில் தோன்றி இவனுக்குத் தம்பியென்ற உறவு பூண்ட அரசசிம்மன் ( இராச சிம்மன் ). தான் முந்தச்சென்று அம்மகளை மணக்க உளங் கொண்டு, பழிக்குச் சிறிதும் அஞ்சாமல் பழனக் காஞ்சிப்பதி

புகுந்தான். தன்பதிபுகுந்த பாண்டியனைப் பல்லியம் முழங்க எதிர்கொண்டு, தன்குலச் செல்வியையும் அவனுக்கே மணம் முடித்தான். சென்னிமகளைச் சொந்தங்கொண்டதோடு மாம னாகிவிட்ட சோழன் துணையால் இராசேந்திரனின் ஆட்சியில் உரிமை பெறவும் துணிந்தான் இராசசிம்மன்.

## முரணகற்றச் சரண்புகுந்தான் :-

மருமகனுடன் மாமனான வளவர்கோனுமிணைந்து மதிவழி வந்த மாறன்மேல் படையெடுத்தான். திரண்டெழுந்துவரும் சேனை பாண்டிநாட்டெல்லையில் தங்கிய செய்தியறிந்தான் இராசேந்திரன். நேற்றுவரை நட்புடன் உறவும் கொள்வான் என்று நாம் எண்ணியிருக்க, சோழன் இன்று பகையாகி எதிர்ந்தானே – என்று எண்ணமிட்டவேந்தன், எல்லாம் இறைவனின் திருவுள்ளப்படியே நடக்கும். ஆகவே அவ னுள்ளம் எதுவென அறிவோமென்று திருக்கோயிலுக்குச் சென்று பரவி வழிபட்டான்.

'அன்று பாதியிரவில் உன் அடிபணிய வந்தவன் இன்று பகைவனாய் எழுந்துள்ளான். அறத்திற்கு அன்று அவன் துணையாய் நின்ற நீர் இன்றும் அவற்குத் துணையாவீரோ' என்று கசிந்து கேட்கவும் 'சோழனை நின்தானையோடு எதிர்த்துநில் – வெற்றி நீயடைய நாம் துணைசெய்வோம்' – என்ற ஒலி, வானூடெழுந்தது.

" எய்திவந்த தெவ்வரோ டெதிர்ந்துருத்து நின்றுபோர்
செய்திவென்றி நின்னதாதல் செய்துமென் றெழுந்ததால்"

ஆகாயவாணி கேட்டு அகம்மகிழ்ந்தான். விடியும் எல்லை நோக்கி விரைந்து சந்தியாதிவினைக்கடன்களைக் கழித்து, பூசை முறை முடித்து செருக்கிய தன் சேனையோடு களம்புகுந்தான் காவலன்.

## அதிர நடந்த உதிரப் போர் :-

அலைசிறந்த கடல்மேல் அழகியநதி படையெடுத்த காட்சி போல் சென்னிசேனைக்கடலுள் செழியன் படை கலந்தது. உருமென்ற இடிக்குரலும், உலவையன்ன ( காற்று ) செலவும்,

வெருவு தீயின் வெகுளியும், வெடித்த வீர நகையும்கொண்டு இருபடை வீரர்களும் மோதினர். தேரிஞேசை, கந்துகம் (குதிரை) சிரிக்குமோசை, மறவர்தம் போரிஞேசை, தோள் புடைக்குமோசை எல்லாம் கலந்து முந்நீரிஞேசையை ஓசை யற்றதாக்கியது, சிலேபயின்ற வீரர், கலேபயின்ற வாளர், கொலேபயின்ற வேலர், மலேபயின்ற மல்லரென அவரவர் அவரவரொடு எதிர்த்தனர். தறிந்த தாளும், தகர்ந்த சென்னி யும், செறிந்த தோளும், சரிந்த தேரும் கணக்கிட வொண் ணுமோ ?

இப்படியாகச் சேனேகள் ஆதித்தன் உச்சிக்கு வருமளவும் அரும்போருடற்றின. வெயிலின் கொடுமையை மிகக்காட்டும் வேனிற் காலமும் வந்தது வெயிலவனின் கரங்கள் மண் பிளந்து பாதலம் நுழைகின்றன. கானல்நீரும், வெயர்வை நீருமன்றித் தூயநீர் எங்கும் வற்றியது. சுடுநிலம் தடவிவரும் காற்றும், அங்குவீசும் நிலவுங்கூடச் சுடுகின்றன. தீயோரைச் சேர்ந்த நல்லோரும் தீயராகவே மாறுவர் என்பதை இது காட்டுகிறது.

### களத்திலே சில காவியக் காட்சிகள் :-

களிறுகள் மதவூற்றம் இலாமையால் சோர்ந்தன. ஊழிக் காற்றென உலவும் குதிரைகள் வெப்பத்தால் வாடித் தென்ற லெனத் தளர்நடையிடுகின்றன. சுருங்கக்கூறின் வேனில் வேந்தன் சூறைக்காற்றெனும் பாகன்தூண்ட கானல்தேரேறி வெப்பமாம் படைகளே வீசி இருபடைகளேயும் சோர்வடையச் செய்தான்.

இரக்கம் சிறிதும் இலாத செல்வர்பால் இரப்பார்போல வெப்பத்தை வாரியிறைக்குங் கள்ளிநீழலில் சிலர் ஒதுங்கி ஞர்கள். வறுமையாளன் தன்னினும் நனிவாடும் மிடியாள னிடம் செல்வதுபோல் இலேயற உதிர்ந்த மரநிழலேச் சிலர் சேர்ந்தார்கள். கொல்யானே, பரிமான், தேரின் குறுநிழல் குறுகுவாரும்; தம் கேடயத்துள்ளேயே தம்முருக்கரப்பாரு மாகச் சிலர் தோன்றினர். வீரவானம் புகுந்த மறவர்களின் நடுகல் நிழலேச் சிலர் நாடினர்.

**புவனியீன்ருன் வைத்த புனற்பந்தர் :-**

இப்படி வெயில் கொடுமையால் படைகள் வருந்துமமயத்தில் அளவிலா உயிர்களை ஈன்ற தாயனுர் – துலைபோல் யார்க்குஞ் சமநிலையாய கூடல்நாயனுர் பாண்டியனின் படைநடுவிலே வேதங்களென்ற கால்நட்ட பந்தரொன்று சமைத்தார்.

“ புண்டர நுதலுங் காதின் புறத்தணி மலரும் பாத
முண்டக மலர்மே லொற்றைக் கிண்கிணி முழங்குங் கச்சியாப்
புண்டதோ லுடையுங் கண்டோ ருள்ளமுங் கண்ணும்
[ கொள்ளை
கொண்டபுன் னகையு முள்ளக் கருணையின் குறிப்புந்
[ தோன்ற ”

வேணியணிந்த விமலன் புண்ணியச் சிரகந் தாங்கித் தணித்தனர் தண்ணீர்த் தாகம்.

சுந்தரப்புத்தேள் வைத்த தூயநறு பந்தல் அடைந்து நன்னீர் பருகியெய்ப்பகன்ற பாண்டிப் படைகள் வளவன்மேல் சீறியடர்க்கப், பொன்னிக் காவலன் தானைக் கடலுடைந்தது போல் சாய்ந்தன. மடலுடை வாகைவேய்ந்தான் மாறன்! வளவனை மருகனேடும் பற்றிவந்தனர் ஒற்றர். கன்னிநாடன் அவர்களையுங்கொண்டு திருக்கோயில் புகுந்து ‘ எந்தையே ’ இவர்கள்பால் நான் செய்யத் தகுவதென்ன ? ’ என்று கேட்க ‘ அறவன் அல்லையோ நீ ; உன்னகத்திற்கிசைந்தது செய்க . என்ற ஒலி விண்ணில் கேட்டது.

செழியர்பிரான் இராசேந்திரன், இறைவன் ஆணையைச் சிரமேற்ருங்கிச் சோழனுக்குச் சில யானை குதிரைகளை வழங்கிச் சோணுட்டிற்கு விடுத்தான். தன் தம்பியான இராசசிம்மனின் செருக்கடங்கத் தானுளும் செல்வத்தை மாற்றியும், சிறிது அவனுக்கு ஒதுக்கியும் கொடுத்தான். பின் [பல்வளனுஞ் சிறக்கப் பல்லாண்டு நின்று பாண்டிநாட்டை ஆண்டான்.

( வளரும் )

# * இறைவனுக்கு எண்ணமென்ன ?

வித்துவான். திரு. இரா. செல்வக்கணபதி

வேல்முருகன் அருள்வேண்டி வாழைத் தோட்டம்
விருப்பினெடு அமைத்திட்ட நண்பன் வாழைக்
கால்முற்றிக் குலைதள்ள மகிழ்ந்த நெஞ்சால்
கருதிட்டான் முதல்தாற்றைப் பழுக்க வைத்தே
ஆள்ஒருவன் தலையேற்றி எண்ணிக் கட்டி
அத்தோடு பழத்தொகைக்குச் சீட்டுந் தந்து
நால்இரண்டு கல்தாண்டி முருகன் கோயில்
நடந்தேபோய்ச் சேர்த்துவிடு பழத்தை என்ருன். (1)

பணம்படைத்த நண்பனுக்கோ ஏழை எல்லாம்
பசியாத வரம்படைத்தார் என்றே எண்ணும்
குணமுண்டு ; கொடிதான வெய்யில், உள்ளே
குமைகின்ற பசிவயிறு இரண்டுஞ் சேர
உணராத வயிற்றுக்காய் 'இறைவா' என்றே
ஒருசீப்பில் பழம் நான்கு எடுத்துத் தின்ருன் ;
பணமற்ற ஏழைக்குச் சோறு போடப்
பாதையிலே யாருண்டு ; கோயில் சேர்ந்தான் ! (2)

வாட்டமுற்ற சமுதாய வயலில் பூத்த
வனப்பிழந்த மலராக நின்ற ஏழை
மூட்டையொடு பழச்சீட்டைக் கோயில் காவல்
மேற்பார்ப்பான் முன்னிலையில் சேர்த்தான் ; சீட்டுக்

---

* தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் வெளியிட்ட நிகழ்ச்சி ஒன்றைத் தழுவியது.

காட்டியது பழம்நான்கு இல்லை என்று ;
கணக்கெடுத்துக் குறைக்குஒரு கடிதந் தந்தான் ;
மூட்டியது சினத்தீயை ; வெகுண்ட நண்பன்
முகிழ்த்திட்ட கோபத்தால் அடித்துத் தீர்த்தான். (3)

நண்பனவன் உறக்கத்தில் முருகன் வந்தான் ;
நாயகமே பழத்தாற்றை நேற்றே கட்டி
முன்னிலையில் சேர்த்திட்டேன் ; முட்டாள் நான்கை
முன்னெடுத்து உண்டிட்டான் ; பொறுக்க என்றான் ;
தண்முருகன் வாழைத்தார் பெற்றேன் இல்லை ;
தரமான பழம்நான்கே உண்டேன் என்றான் ;
உண்ணமுதம் பசிவயிற்றில் நிறைதல் ஒன்றே
உவப்பாமோ இறைவர்க்கு விழித்தான் நண்பன். (4)



---

# விசேஷ நாட்கள்

## 11—11—70 முதல் 12—12—70 முடிய

| | |
|---|---|
| 12—11—70 | அன்னாபிஷேகம் : திருமூல நாயனார் திருநக்ஷத்திரம் |
| 13—11—70 | நெடுமாற நாயனார் திருநக்ஷத்திரம் |
| 14—11—70 | இடங்கழி நாயனார் திருநக்ஷத்திரம் |
| ,, | வேலூர்க் கிருத்திகை |
| 23—11—70 | மெய்ப்பொருள் நாயனார் திருநக்ஷத்திரம் |
| 24—11—70 | ஆனாய நாயனார் திருநக்ஷத்திரம் |
| 26—11—70 | பிரதோஷம் |
| 30—11—70 | மூர்க்க நாயனார் திருநக்ஷத்திரம் |
| 1—12—70 | சிறப்புலி நாயனார் திருநக்ஷத்திரம் |
| 10—12—70 | பிரதோஷம ; பரணிதீபம் |
| 11—12—70 | கணம்புல்ல நாயனார் திருநக்ஷத்திரம் |

# எண்ணிய எண்ணங்கள்!
# சொல்லாத சொற்கள்!

" செந்தமிழ் இலக்கியச் செம்மல் "

**டாக்டர் திரு. ந. சஞ்சீவி**

( மலர் 29. இதழ் 11. பக்கம் 605 இன் தொடர்ச்சி )

எளியேன் நாற்பத்து நான்காண்டு (44) வாழ்வில் எவ்வாறே கருவிலேயே உள்ள திருவாய்க் கற்றிருக்கும் ஒரு பெரும் பாடம் - பெற்றிருக்கும் ஒரு பெரும் பரிசு - என்னிலிருந்து என்னைப் பிரித்தாராய்ந்து பார்க்கும் பெருங்கலையே ஆகும். அந்த வகையில் இந்தப் பெரும்பட்டம் எளியேனுக்கும் பெருங்கலையே ஆகும். அந்த வகையில் இந்தப் பெரும் பட்டம் எளியேனுக்கும் எப்படி வந்தது என்று எண்ணும் போதே திண்ணமாய் அடியேன் அறிவன - உணர்வன - சில உண்டு. இந்தப் பட்டம் தருமை ஆதீனம் தன் ஆட்சிக்கு உட்பட்ட திருச்சிராப்பள்ளி மௌனமடத்தில் அகதியாய்ச் சென்ற ஒரு முனிசாமி முதலியார் உண்மையோடு உழைத்த உழைப்புக்காக, அவரும், அவர் மகனும் மருமகளும் தவங் கிடந்து பெற்ற குழந்தைக்கு நாற்பத்து நான்கு ஆண்டுகள் கழித்து நல்கும் நல்ல பரிசு சிற்றுளாய்த் தருமை ஆதீன - மௌனகுரு மடத்தில் - தொண்டாற்றிய ஒரு முனுசாமி முதலியார் - தம் தந்தையால் தொடர்புபெற்ற மௌனமடத்தின் தம்பிரானுய்த் தரையெல்லாம் தவழும் தவச்சடையராய் விளங்கிய சொக்கலிங்கத் தம்பிரானிடம் நால்வர் நான்மணி மாலை முதலிய செந்தமிழ்ச் சிவநெறி நூல்களை ஓதியமையால் பின்னுளில் பெருந்தமிழ் ஆசிரியராய் விளங்கியமைக்கு - அதே மௌனமடத்தில் தாயுமானவர் தமிழ் இலவச வகுப்புகளை நடத்தி சிவத்தொண்டும் செந்தமிழத் தொண்டும் செய்தமைக்குக் கிடைக்கும் பரிசு.

திருச்சிராப்பள்ளி மலைக்கோயில் உச்சியிலே ஒளிவிளக்கு ஒளிரவும் மணியொளி முழங்கவும் நண்பர்களைக் கூட்டி

நற்பணி புரிந்த முனிசாமி முதலியாருக்கு நாள்தோறும் மௌனமடத்தில் அமைந்துள்ள ஆனைமுகன் - ஆறுமுகன்- அருவஉருவன் ஆகியோர்க்குத் தாமரை நூலிட்டு நெய் விளக்கு இட்டமைக்குக் கிட்டிய பரிசு. தாத்தா வழி - தந்தை வழி - கடவுள் நம்பிக்கை கொண்ட ஒரு கலியுக இளைஞனுக்கு - அரசியல் ஆர்வங்கள் இருந்தும் கட்சி வலை களில் சிக்காதவனுக்கு - இருபதாண்டுக் காலம் அறிவு வெள்ளத்தில் அலைப்புண்டபோதும் ஒருநாளும் ஆதிபகவனை மறவாத ஊழியனுக்குப் பல்லாண்டுகள் நரக - நகர வாழ்வு அறிந்திருந்தும் இயற்கை அற்ற இயந்திர நாகரிகத்தை வேரோடு வெறுப்பவனுக்குக் கிடைக்கும் பரிசு - பாராட்டு - இந்தப் பட்டம். அத்துடன் எத்தனையோ குறைகட்கும் குற்றங்கட்கும் இடையேயும் பெரிய குறிக்கோளை மட்டும் விடாத சிறிய குறளனுக்குக் கிடைக்கும் சிறப்பு இந்தப் பட்டம். பாட்டனார் வழி - அப்பார் வழி, திருச்சிராப்பள்ளி மௌனகுரு மடத்திலேயே குழந்தைப் பருவமெல்லாம் சுற்றிச் சுற்றித் திரிந்ததன் பயனாக இன்னும் அந்த மடத்து மண் வாசனையையும் மறவாமல் இருக்கும் ஓர் உண்மையாளனுக்கு - மௌனகுரு மடத்து ஆனைமுகனையும் - ஆறுமுகனையும் - அருவ - உருவனையும் பல்லாண்டுக் காலம் நாளும் வழிபட்ட ஒரு நல்லவனுக்கு - அந்த மடத்துக் கட்டளைத் தம்பிரான்கள் பலராலும் பாராட்டிச் சீராட்டி வளர்க்கப்பட்ட ஒரு பையனுக்கு- நாற்பத்து நான்கு ஆண்டுகட்குப்பின் கிடைக்கும் நல் வாழ்த்தே இந்தப் பட்டம். பிஞ்சிளம் பருவத்திலேயே திருமுருகாற்றுப் படையையும், கந்தர் கலிவெண்பாவையும், கலைமகள் அந்தாதியையும் செந்தமிழ்ச் சொக்கனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட தமிழ்விடு தூதையும் படித்துப் படித்துப் பழகிய ஒரு மெய்யன்பனுக்குக் கிடைக்கும் பாராட்டு இந்தப் பட்டம்.

எல்லாவற்றிற்கும் மேலாக பிஞ்சிளம் நெஞ்சையும் நஞ்சாக்கும் சூழலால் எளியேன் உள்ளத்தும் தொத்தி யிருந்த ஊழல் நோயால் ஒருமுறைசிறுபிள்ளைத்தன மாய் மௌனமடத்துத் தவசிப் பிள்ளையை ஏழு வயது இளமைப் பருவத்தில் ஒரே ஒரு இழிசொல்லால் என்ன காரணத்தாலோ இடித்துரைத்தமையால் அவர் செய்த புகாரால் அடியேன் தந்தையார் அவர் தந்தையாரோடு சென்று

அடியேனை அந்தத் தவசிப் பிள்ளையின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கச் சொல்ல அவ்வாறே மனமுவந்து அடியேனும் அந்நாளில் ஆர்வமுடன் செய்த அந்த ஒரே செயலுக்காகவே போலும் ஆண்டவன் அடியேனுக்கு ஆராமையோடு இன்று வழங்கும் அருட்கொடையே 'செந்தமிழ் இலக்கியச் செம்மல்' என்னும் பட்டம்! இருபதாண்டுக்கால ஆசிரிய வாழ்வு-ஆராய்ச்சி உழைப்பு - பதினான்கு நூல்களைப் பன்னூறு கட்டுரைகளைப் படைக்கப்பட்ட பாடு - இந்நாட்டிலும் பிற நாடுகளிலும் நூற்றுக்கணக்கான கூட்டங்களில் மணிக் கணக்காக முழங்கிய முழக்கம் - இவையும் காரணமாகலாம். ஆனால் ஒன்றுமட்டும் உறுதி. இந்நாள் சிறியேன் சிறுமைகளை எல்லாம் மன்னித்து ஒருசில பெருமைகளை மட்டுமே எண்ணி அருமைத் தருமை ஆதீனம் அதன் அருட்பிச்சையாகிய அடியேனை வாழ்த்தும் நாளே இந்நாள்.

எனவே பெற்றோர் பெருமுத்தம் பெற்ற பெருங் குழந்தை போலும் எளியேன் உள்ளத்தில் எழுகடலாய் நன்றியுணர்ச்சி பொங்கும் இந்நேரத்தில் ஈண்டு அருட்கடல் வெள்ளமாய் எழுந்தருளியுள்ள ஆதீனத் தலைவருக்கு அடியேன் ஒரு பட்டமளிப்பு விழாவில் பட்டம் பெறுவோன் கூறவேண்டிய உறுதி மொழிகளைக் கூற விழைகிறேன். பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் பெரும்பாலும் கூறப்படும் எழுதிவைத்த ஏட்டு உறுதிமொழிகள் – ஒப்புக்கும் கடனுக்கும் உரைக்கப்படுபவை. இங்கே எளியேன் கூற விழையும் உறுதி மொழிகளோ ஒப்புக்கன்று - உயர்வுக்கு; கடனுக்கன்று – கடமைக்கு. ஆம். அவை உடல் பொருள் ஆவி சாட்சியான - உயிருக்குயிரான - உறுதி மொழிகள். அவற்றுள் முதலாவது இந்தப் பட்டத்தை எளியேன் இதுவரை பெற்ற - இனியும் ஆண்டவன் அருளாலும் குருமகா சந்நிதானத்தின் அருளாலும் பெறக்கூடிய - பட்டங்கள் எதைக்காட்டிலும் அரியதாய் - பெரியதாய் – முதன்மையானதாய் மதித்துப் போற்றுவேன். இரண்டாவது இப்பட்டத்தால் எள்ளளவு செருக்கும் எய்தேன்; மாறாக இமயத்தினும் பெரிய பொறுப்புணர்வு பெறுவேன். மூன்றாவது இந்நாள்வரை பெரிதும் செந்தமிழ் இலக்கியத்துள்ளேயே சிறைப்பட்டிருந்த எளியேன் இனி அதன் உயிராய் விளங்கும் சிவநெறிச் செம்மையையும் அறிந்துணர்ந்து வீடுபெற விழைவேன். நான்காவது - இந்நாள்வரை என் குடும்பத்துக்கும்

கூறுதது - அண்மையில் அடியேன் மேற்கொள்ள இருக்கும் அயல்நாட்டுப்பயணத்தில் எந்தநாட்டுக்குச் சென்றாலும் செந்தமிழோடு சிவணிய சிவநெறியையும் பரப்ப முயல்வேன். ஐந்தாவது எளியேன் பத்தாண்டுகளுக்கு முன்பே எழுதிப் பலராலும் பாராட்டப்பெற்ற 'செந்தமிழ் வளர்க்கும் சிந்தனைகள்' என்ற நூலைப்போல 'சிவநெறி வளர்க்கும்சிந்தனைகள்' என்ற நூலை விரைவில் வெளியிடுவேன்

ஆறாவது உடனடியாக அடியேன் ஆற்றும் பல்கலைக் கழகப் பணியாகவே 'திருவிளையாடல்' ஆராய்ச்சியை மேற்கொள்வேன். அவ்வாராய்ச்சியில் அடியேன் கற்ற ஆங்கிலம்-பிரஞ்சு - செர்மன் - கன்னட மொழி அறிவுகளையும் மொழியியல் - மானிடவியல் - அரசியல், ஆட்சிக்கலை அறிவுகளையும் பிற வற்றையும் பயன்படுத்தித் 'திருவிளையாடல்' திறம்காண இறையருளால் முழுமுயற்சி செய்வேன். சிறப்பாகத் திருவிளையாடல் எவ்வாறு தமிழ்நாட்டின் பழமை மிக்க அடிப்படை வாய்மொழிச் செல்வம் (Folklore) என்பதைப் புலப்படுத்த முயல்வேன்; திருவிளையாடற் கதைகள் இன்றைய வாழ்வுக்கும் ஒளிகாட்டும் உண்மையைப் பற்றி விளக்க உழைப்பேன் இந்த முயற்சி பற்றிய உணர்ச்சி புதுவையில் இருக்கும் French Institute of Indology திருவிளையாடலுக்குச் செய்திருக்கும் தொண்டினை எண்ணும்போது இன்னும் அதிகமாகிறது. ஏழாவது அவ்வப்போது ஞானசம்பந்தம்' திங்கள் இதழுக்குக் கடவுட்பொருள் பற்றிய கட்டுரைக் காணிக்கைகளைச் செலுத்துவேன். எட்டாவது இந்நாள்வரை 616 அரிய நூல்களை வெளியிட்டும், நூற்றுக்கணக்கான அறங்களை நிகழ்த்தியும் ஒப்புயர்வற்ற வகையில் தமது ஆட்சியில் இருக்கும் கோயில்களைத் தனிச்சிறப்புடன் புரந்தும் பல்லாற்றாலும் திருநெறிய தெய்வத்தமிழ் வளர்த்தும் அருள்நெறி பரப்பும் இவ்வாதீனத்தின் புகழ் திக்கெட்டும் பரவ ஒல்லும் வகையால் எல்லாம் உலகத்தின் பல பகுதிகளிலும் உழைப்பேன். ஒன்பதாவது அன்றாட வாழ்வில் அறநெறி ஓங்க - சமுதாயம் சன்மார்க்கப் பூம்பொழிலாய்த்திகழ - திருவருளை - குருவருளை - நம்பித் தொண்டாற்றுவேன்.

இந்த ஆதீனத்துக்கு இருபத்து ஏழு (27) ஆண்டுகட்கு முன்பு-1943ஆம் ஆண்டுக் கோடை விடுமுறையில் வந்தேன்.

சென்னைப் பச்சையப்பர் கல்லூரியில் சேர்ந்து ஐந்தாண்டுத் தமிழ்க்கல்வி பயில ஊக்கமும் உறுதியும் கொண்ட நிலையில் அப்போது திருச்சிராப்பள்ளி மௌன மடத்துக் கட்டளை விசாரணைத் தம்பிரானுய் விளங்கிய சைவசித்தாந்தக்கடல் சோமசுந்தரத் தம்பிரான் அவர்களால் அழைத்துவரப் பெற்றேன். அப்போது இங்கே எழுந்தருளியிருந்த 24.ஆம் பட்டத்தின் ஆருளாதரவிலே ஈசானிய சிவாசாரியார் அவர்களால் 'சிவஞான சித்தியார்' வகுப்பு நடைபெற்றது. அப்போது தருமையைப் பெருமை செய்யும் காவிரியில்இருபோதும் நீராடிச் சொக்கலிங்கப்பெருமானை வழிபட்டுச் சித்தியார் வகுப்புகளைச் செவிமடுத்தேன் அதன் பயனுகவேபோலும் பின்னெருகால் சிவாசாரியார் தலைமையில் குடந்தையில் பேசும்பேறு பெற்றபோது 'இளம்பருவத்தே காணும் மூதறிவு இவரிடம் உண்டு' என்று அருளுணர்வு காரணமாகவே ஈசானிய சிவாசாரியாரால் வாழ்த்தப்பெறும் வளம்பெற்றேன்.

அடியேன் முதன் முதல் 27 ஆண்டுகட்கு முன்பு ஈண்டு வந்தபோது என்னை உடனிருந்து வாழ்வித்த புலவர் மாமணி, உயர்திரு இராம. கோவிந்தசாமிப் பிள்ளை அவர்கள் இன்றும் இங்கு இருப்பது இன்னுமொரு தெய்வப்பொருத்தம். இருபத்தேழு ஆண்டுகட்கு முன்பு சித்தியாரில் உள்ள விநாயகர் வணக்கத்தை மட்டுமே தவத்திரு, சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் தயாரிப்பின்படி அப்போதைய குருமகா சந்நிதானத்திடம் கூறினேன். என்பொருட்டு சோமசுந்தரத் தம்பிரான் குருமகாசந்நிதானத்தின் அருளுக்கு வேண்டுகோள் விடுத்தார்கள். அறுபது ரூபாய் (60—00) கிடைத்தது. சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் நட்டவித்து நல்மரமாகி சோமசுந்தரப்பெருமான் திருவிளையாடல் திருநாளில் 'நரி' யாகிய நாயேனையும் 'பரி' யாக்கியிருப்பதைப் பார்க்கிறேன்; நன்றியுணர்ச்சியால் நெஞ்சம் நெகிழ்கிறேன்.

சிறியேனுக்குப் பட்டம் 'செந்தமிழ் இலக்கியச் செம்மல்' சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி 'செம்மல்' என்ற சொல்லின் அடியாகிய 'செம்மை'க்குரிய ஏழு பண்புப் பொருள்களை எடுத்துரைக்கிறது. அவை:- (1) செவ்வை (2) நேர்மை, (3) மனக்கோட்டமின்மை, (4) ஒற்றுமை, (5) பெருமை, (6) தூய்மை, (7) அழகு ஆகும். இவ்

வேழும் ஏழையேனுக்கு வாய்க்க வாழ்த்தும் வாழ்த்தன்றோ இப்பட்டம் ?

பேதையேன் பெருமை பெறும் இந்தப் போதில் என் பெற்றோர்க்கும் அடியேன் அறிந்த அவர் பெற்றோர்க்கும் முன்னோர்க்கும் நன்றி. எளியேனைப் பெற்றதந்தை விட்டுப் பிரிந்து மறைந்த பின்னர் எனக்குக் காப்புத் தந்தையாய் விளங்கும் திவான்பகதூர் தி. மு. நாராயணசாமிப் பிள்ளை அவர்கட்கு நன்றி. இந்த விழாச் செய்தியைச் சென்ற ஞாயிறு அவரிடம் எளியேன் செப்பியபோது அளவிலா மகிழ்ச்சி அடைந்த அவர் ' உன் அப்பாவால்தான் எனக்கும் தருமை ஆதீனத்திற்கும் முதலில் நெருக்கம் இதற்குமுன் பட்டத்தில் இருந்த சந்நிதானத்துக்கு உன் அப்பா தூண்டுதல்பேரில் தான் திருச்சிராப்பள்ளியில் பெரியதொரு பட்டணப்பிரவேசம் நடந்தது. அப்பப்ப! அதுபோல் ஒரு நிகழ்ச்சி நான் அறியேன் ' என்றார். எளியேனைப் பொறுத்த வரையில் கலியுகத்துக் கபிலராய் விளங்குபவர்கள் திவான்பகதூர் நாராயணசாமிப் பிள்ளையவர்கள். தருமைக் குருமகாசந்நிதானத்தின் திருக்கரத்தாலேயே திருவானைக்கா குடமுழுக்குத் திருப்பணியை நிறைவு செய்திருக்கும் பெரியவர் அவர். தன் பிள்ளைகளுள் ஒருவனாகவே தன் நண்பனின் பிள்ளையாகிய என்னையும் கருதிக் காத்துவரும் எண்பதாண்டான இளைஞர் அவர். திருககடவூர்ப் பெருமான் - பெருமாட்டி திருவருளால் அவர் என்றும் இளைஞராய் வாழ இறைவனை என்றும் வேண்டுவேன். அடுத்து எளியேனுக்குத் தமிழ்ப் பாலூட்டி வளர்த்த ஆசிரியர்களுக்கும் அவர்களுள் தன்னிகரற்ற பெரியவராகிய டாக்டர் மு. வரதராசனர் அவர்கட்கும், என்பால் தனியன்பு கொண்ட இற்றை நாள் சென்னை - மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்கள் முறையே உயர்திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்கட்கும் பல்கலைச்செல்வர், பேராசிரியர், டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனர் அவர்கட்கும் என்றும் குன்றா நன்றியுடையேன். கல்லூரிக் காலத்தில் என் மொழிப்பற்றும் நாட்டுப் பற்றும் சீரான வழியில் செம்மைபெற வழிகாட்டிய தலைவர் ம. பொ. சி. அவர்கட்கும் தனி நன்றி

இன்று அறநிலைய ஆணையர் முன்னிலையில் இவ்விழா நடைபெறுவதிலும் ஒரு தெய்வப் பொருத்தம் காண்கிறேன். எனக்கு முதல்முதல் சிலமாத காலத்துக்குக் கிடைத்த வேலை

திருச்சிராப்பள்ளி அறநிலையப் பாதுகாப்புக் கழகக் கிளை அலுவலகத்தில் எழுத்தர் பணிதான்.

இன்று அறநிலைய ஆணையர் இளைஞர்பால் குன்றிவரும் ஒழுங்கு - ஒழுக்க - நிலைபற்றி உளம் உளைந்து குறிப்பிட்டார்கள். உண்மைதான், ஆனால் இந்தச் சிக்கலும் இதுபோன்ற எத்தனையோ சிக்கல்கட்கும் சரியான தீர்வு காண்பது எப்படி? வள்ளுவர் வழியே வழி :

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல் (948)

ஆனால் இன்று அடியேன் நாட்டில் காணும் அவலங்களுள் எல்லாம் பேரவலம் கற்றவரும் ஆழ்ந்து கருதும் தற்சிந்தனைப் பண்பு இழந்து இருப்பதுதான். இமயமும் கங்கையும் இடிசுவராயும் குட்டையாயும் ஆகலாமோ?

எனவே வள்ளுவ வழியில் எண்ணிப் பார்த்தால் கல்வி உலக ஊழலுக்கும் அதுபோன்ற பிற ஊழல்கள் பலவற்றுக்கும் அடிப்படைக் காரணம் சூழல்தான். அந்த அறக்கேடான சூழலுக்கு அடிப்படை பணம் - பணவீக்கம்தான்.

அனைவருக்கும் கூலி கொடுக்கும் பெருமான் அன்று கூலிக்கு உழைத்தான் - அடியும் பட்டான். அப்போதும் அவன் பெற்ற கூலி பிடி பிட்டு. எந்த நாளில் உழைப்புக்குக் கூலி உணவும் உடையும் உறையுளும் - ஏற்றபிற வாய்ப்பும் வசதிகளுமே அன்றிப் பணமல்ல - காசல்ல - என்ற நிலை ஏற்படுகிறதோ அன்றே உலகம் உய்யும். பணமே பாழ்பல செய்யும் பெரும்பகை - கொடுநோய். எனவே பணம் - பணவீக்கம் - பணப்புழக்கம் - இவை யாவும் பெருமளவுக்கு ஒழிந்தால் ஒழிய மனப் புழுக்கம் ஒழியாது; பண்பு வாழாது. இந்த அடிப்படை உண்மையை முதலில் நம் நாட்டுப் பெற்றோரும் பெரியோரும், அரசியல் அறிஞரும், பொருளியல் புலவரும், ஆட்சியரும், சமூகச் சீர்திருத்தரும், திரைப்படச் செல்வரும் உணர்ந்து திருந்தினால் - திருத்தினால் - ஒழிய ஒழுக்கம் ஓங்காது. இக் கருத்தை இத்தெய்வத் தமிழ் மன்றம் தீர ஆராய்ந்து பார்க்க வேண்டுகிறேன்.

இன்றைய உலகம் - சிறப்பாக இளைஞர்உலகம் - பொருள் வெறிகொண்டு போர்க்களம் - சாக்களம் - புகுகிறது; அருள் வெறிகொண்டு அமைதிக்களம் – வாழ்வுக்களம் - புகவில்லை. இதற்கு ஒரு பெருங்காரணம் அறிவியல் வெறி. இந்த மாயை நிலை மாயவேண்டும். அறிவியல் எப்போதும் தவறே செய்கிறது. ஒரு சிக்கலையும் தீர்ப்பது இல்லை. ஒன்றைத்தீர்க்கும் முயற்சியில் அது பத்துச் சிக்கல்களையே தோற்றுவிக்கிறது

GEORGE BERNAD SHAW (1856 - 1950)

Science is always wrong; it never solves a problem without creating ten more.

The Treasury of Humorous Quotations Ed; Evan Esar Phorenix House Ltd., London 1951, 1955.

என்று பகுத்தறிவாளர் தலைவர் பேரறிஞர் பெர்னாட்ஷா கூறியதையாவது இந்த உலகம் எண்ணிப் பார்க்கவேண்டாவா? வேதியியலுக்காகவும் உலக அமைதிக்காகவும் இரு நோபல் பரிசுகள் பெற்று இன்றும் நம்முடன் உயிர்வாழும் அறிவியல் பேராசிரியர் லினங் பாலிங் 'இரண்டாவது உலகப் போரை ஒத்த மூன்ருவது உலகப்போர் இனி மூண்டால் ஆருண்டுகளில் நடத்தும் போரை ஒரே நாளில் நடத்தலாம். இன்று உலகில் கையிருப்பாக இருக்கும் முப்பத்திரண்டாயிரம் (32000) மெகடன் அணு ஆயுதக் கொலைக்கருவிகள் உலக நாகரிகத்தை ஒழித்துக்கட்ட தேவைக்கு மேல் இருக்கும் இருப்பாகும். மனித இனத்தை முற்றிலும் அழிக்க அதுவே போதும்'

Prof. LINUS PAULING

The world's stockpile of nuclear weapons, 320.000 megatons, is far more than enough to destroy civilization; It may be enough to bring the human race to an end.

You know its possible now to fight a war equal to the second world war in a single day instead of spreading it war 6 years.

(M. Ct. M. Chidambaram Chettiar,
Memorial lectures in Foreign Policies
and Disarmament 14th February 1967.)

என்று கூறியுள்ள திடுக்கிடும் செய்தியையாவது இந்த உலகம் எண்ணவேண்டாவா? இற்றை நாள் கிரேக்கப்பேரறிஞர் டாக்டர் பால்பிரண்டன் பொறிகளின் ஆதிக்கமும்பொருளியல் ஆதிக்கமும் மிக்க இன்றைய வாழ்வின் தாக்குதலால் இந்தியா சமய மதிப்புகளை இழக்குமானால் அது பெரிதும் வருந்தற்கு உரியதாகும். நாங்கள் போய் தோற்றுப் புறமுதுகு காட்டித் திரும்பும் பொய் நெறியில் இந்தியா புதிதாய்ப் புகவேண்டா. பொருள் வெறியும் பொறிகள் வெறியும் அதைப் பொசுக்க வேண்டா. அறிவியல் கற்று தங்கள் சமயவெறியில் பயன் காணுமல் அதை வெறுக்கும் இந்திய இளைஞர்கள் எங்கள் தோல்வி அறிந்து பாடம் படித்துக் கொள்வார்களாக.

Dr. PAUL BRUNTON

It would be regrettable for India to lose under the pressure of modern life, with its industrialism and materialisms.

Those scientifically educated young indians who have no use for their own religion and regard it with disdain should take a lesson from the west which has gone through an equivallent experience already, but now has to retrace its ways

என்னும் பொன்மொழிகளையேனும் பொறுமையோடு சிந்திக்க வேண்டாவா?

எனவே இந்த உலகு உய்ய அருள் வெறிக்குக் கட்டுப் பட்டதாய் அறிவுவெறி அமையவேண்டும். அது ஒன்றே உலகு உய்ய வழி. அந்த வழியை வையக மெல்லாம் அறிய ஏழையேன் தொண்டு என்றும் இருக்க ஆண்டவன் அருள்வா ருக. குருமகாசந்நிதானம் கருணை கூர்வதாக. தங்கள் எல்லோர் வாழ்த்தும் துணைபுரிவதாக. இவ்வாறு வேண்டி அனைவரையும் மனமொழி மெய்களால் வாழ்த்தி வணங்கி விடைபெறுகிறேன்.

---



# அக்னி

வேதாந்த சிரோமணி,

**பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

( மலர் 29, இதழ் 11, பக்கம் 627 இன் தொடர்ச்சி )

மாகிஷ்மதிதேசத்தரசன் நீலத்வஜனுடைய பெண்ணை மணந்தவனும் கிருத்திகா நக்ஷத்திரத்திற்கு அதிதைவமும், சுக்ரீவனின் சேனைத்தலைவனான நீலனுக்குத் தந்தையுமான அக்னி பகவானுக்கு ஓர் அஷ்டோத்திர சதநாமாவளி ஸ்தோத்திரம் உள்ளது. நாமாவளி மட்டும் எழுதப்படுகிறது :-

ओं अग्नये नमः
कृशानवे
ज्वलनाय
वीतिहोत्राय
धनञ्जयाय
विभावसवे
जातवेदसे
विधात्रे
मन्त्रदीधितये
स्वाहा स्वधापतये
वह्नये
शिखावते
श्रीप्रदायकाय
शमीगर्भाय
बृहद्भानवे
हिमारये
हव्यवाहनाय

ओं वैश्वानराय नमः
चित्रभानवे
राजन्याय
देवतामुखाय
सप्तहस्ताय
मन्त्रजिह्वाय
कुमारपरिपोषकाय
मरुत्वेष्टिप्राज्यहविःप्राश
नाजीर्तिसंगताय
खाण्डवप्राशनोल्लासाय
पार्थस्यन्दनचापदाय
शोचिष्केशाय
कृष्णवर्त्मने
रोहिताश्वाय
तमोपहाय
ज्वालायुधाय
वैजन्ताय

ओं उदर्चिषे नमः
अजिराप्रभवे
सर्वभक्षाय
वायुसखाय
चतुःश्रृङ्गाय
द्विशीर्षकाय
बर्हिषे
शुष्मणे
सप्तजिह्वाय
दहनाय
मेष ।हनाय
कृपीडयोनये
सप्तार्चिषे
हुतभुजे
तनूनपाते
द्विजदक्षिणहस्तस्थाय
क्षेत्रनेत्रसमाश्रिताय
ज्वालाजिह्वाय
देवदूताय
द्विजन्मोपास्यदैवताय
श्रुततीर्थाय
मन्दहासाय
कृष्णकौमोदकी प्रदाय
जुहुराणाय
पङ्क्तिराधसे
सहोजसे
घसवे
त्रिपदे
उषर्बुधाय
शुचये
सीतापातिव्रत्यप्रकाशकाय
हिरण्यरेतसे
दमुनाय
अर्चिष्मते

ओं पावकाय नमः
अनलाय
नीलध्वजसुताभर्त्रे
पाञ्चजन्याय
शिवायुधाय
अनेकरूपाय
त्रितनवे
उख्याय
तेजोवतीप्रभवे
धूमध्वजाय
जाग्रविदे
शर्वरीशाय
तुषग्रहाय
पुण्डरीकाय
शर्वफालनेत्रात्मने
मत्स्यशापदाय
श्रौतस्मार्तक्रियादक्षाय
कृत्तिकातार दैवताय
शुक्लाय
परिज्ञाय
त्रेतात्मने
ऋणबाधानिवारकाय
वंश्याय
दक्षिणपूर्वेशाय
नीलताताय
नलेष्टदाय
पचेलिमाय
आश्रयाशाय
नर्यापसे
आशुशुक्षणये
वाडवाय
छिन्दिराय
अर्काय
अस्रजिह्वाय

| | | | |
|---|---|---|---|
| ओं वायुसारथये | नमः | ओं अरणिसम्भवाय | नमः |
| उष्णाय | | कर्मब्रह्मस्वरूपाय | |
| विसर्पाय | | ब्रह्मवर्चसदायकाय | |
| विश्वात्मने | | | |

அக்னியின் வழிபாடு மிகவும் வேண்டற்பாலது. அதன் காரணமாகவே அந்தணரில் பிர்மசாரிகள் தினம் காலையும் மாலையும் சமிதாதானமும், இல்வாழ்வார்கள் ஔபாஸனமும் செய்யவேண்டும் என்று விதித்தனர். பிர்மசாரிகள் சமிதாதான ஹோமத்தின் முடிவில் "यत्ते अग्ने तेजस्तेनाहं तेजस्वी भूयासं" என்று வேண்டுகின்றனர் (ஹே அக்னி உனக்கு யாதொரு தேஜஸ் உள்ளதோ அதனுல் நான் தேஜஸ் உள்ளவனுகவேண் டும்) இல்லறத்தார்கள் ஔபாஸனத்தின் முடிவில்

अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि विद्वान् ।
युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥

(நீ சகலமான வழிகளையும் அறிந்தவன். எங்களைச் செல்வம் பெறும்படியாக நல்வழியாக அழைத்துச்செல். எங்களைத் துன் புறுத்தும் பாபங்களைப் போக்கு. கடைசிகாலத்தில் என்னுல் நமஸ்காரம் செய்யக்கூட முடியாது ஆதலின் நமஸ்காரம் என்ற சொல்லை மிகுதியாகச் சொல்லுகிறேன்.) என்று கூறி அக்னியைப் பிரார்த்திக்கின்றனர். அக்னியை ஜ்வலிக்கும்படி செய்யச் சொல்லுகிற ரிக்கு ஸாமிதேனி, அல்லது தாய்யா எனப்படும். அக்னி பூசித்த திருப்புகலூரில் அக்னிபகவான் உருவம் உள்ளது.

आरोग्यं भास्करादिच्छेत् श्रियमिच्छेद्धुताशनात् ।
ज्ञानं महेश्वरादिच्छेन्मोक्षमिच्छेज्जनार्दनात् ॥

ஆரோக்யத்தை சூர்யனிடமிருந்தும், செல்வத்தை அக்னியினிட மிருந்தும் ஞானத்தைச் சிவபெருமானிடமிருந்தும், மோக்ஷத்தை திருமாலிடமிருந்தும் அடைய விரும்பவேண்டும் என்ற பழ மொழிக்கு ஏற்ப, அக்னிக்கு रयीणां पतिः (செல்வத்திற்குத் தலை வன்) என்ற பெயர் வேதங்களில் கூறப்படுதலின் நாமும் அக்னியை வழிபட்டு இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டற்பால தான செல்வத்தைப் பெறுவோமாக.

———



# திருமந்திரம் - குறிப்புரை

திருக்குறள்வேள்,

**திரு. ஜி. வரதராஜப் பிள்ளை B, A.,**

(மலர் 29. இதழ் 10, பக்கம் 537 இன் தொடர்ச்சி)

127 இருந்தார் சிவமாகி எங்குந் தாமாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே.

குறிப்புரை :- சிவன் செயல் யாவையும் நோக்கி இருத்தல் என்பது, எல்லாம் சிவன்செயல் என்றிருத்தல். இழவு - சுற் போதங்கெடல். சோம்பே - செயலற்றிருத்தல். இழவு வந்தெய் திய சோம்பே என்பது, தனக்கென ஒரு செயலின்றியிருத்தல் என்றபடி.

சித்தர் எல்லாவற்றையும் கண்டும் காணுதிருந்தார் என்பதாம். 15

128 சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதுஞ் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர் கண்டார்ச் சுருதிக்கண் தூக்கமே.

குறிப்புரை :- இருத்தல் - சிவயோகத்திருத்தல். கிடத்தல் - நிட்டை கூடல். சுத்த வெளி முன்னது சத்தியையும் பின்னது சிவத்தையும் குறித்து நின்றன. சுருதி முடிவு - நாத முடிவு. தூக்கம் - சுவானுபவ நிலே.

செயலற்ருேர் நாதாந்தத்தில் பேரின்பம் பெற்றிருப்போர் என்பதாம். 16

129 தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே.

குறிப்புரை :- சிவன் உள்ள உலகம் சிவலோகம்; அங்குச் சேர்ந்திருத்தல் சிவயோகம்; அதன் பயன் சிவபோகம். சித்தர் தம்முள்ளே சிவனைக் கண்டு பேறுபெற்றனர் என்க.

சீவனின் தனி வியாபகம் கெட்டுப் பரவியாபகம் அமையும் என்பதாம். 17

130 எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வன் ஆதியரன் தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்.

குறிப்புரை :- அறிவுக்கெல்லை - சிவன். சிவனது வியாபகத்தை அறியமுடியாது என்க. ஆறு - சரியையாதி நெறிகள். ஒவ்வாது மன்று - உவமையில்லாத சபை. மாணிக்கம் - செம்மை. செம்பொருள் மன்றில் ஆடும் என்க.

ஆதியரன் சீவர்களின் பக்குவத்துக்கேற்ப அருள்செய்வான் என்பதாம். 18

131 மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே.

குறிப்புரை :- மரகதம் – பச்சை. சிரசின்மேல் செவ்வொளியில் பச்சை ஒளி பின்னிய காட்சி யோகியர்க்குக் கிடைக்கும் என்க. பொன்மன்று - சிதாகாயம்.

கூத்தைக் கண்டவர் பேறுபெற்றவர் என்பதாம். 19

132 பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றார் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே.

குறிப்புரை :- உலகிற் பிரியா நெறி - உலகில் தங்கிப் பிறர்க்கு அருளும் நெறி. பிறவாப் பெரும்பயனாவது, உலகில்

பந்தமின்றியிருத்தலாம். மன்றிற் பிரியாப் பெரும்பேறுவது, இறைக் காட்சியினின்றும் நீங்காதிருத்தல் என்பது. பேசாப் பெருமை - மவுன நிலை.

பேறு பெற்றார் மவுன நிலை எய்தினர் என்பதாம். 20

133 பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல் உள்ளந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே.

குறிப்புரை :- பெருமை - பருமை. சிறுமை - நுண்மை. அண்டத்திலும் அணுவிலும் நிறைந்து எம்பெருமானைப்போல அருமையும் எளிமையும் அறிபவர் யார்? ஒருமை - மனம் ஒன்றுகை. ஆமைபோல் உள்ளந்தடக்கலாவது, மனம் பொறி வழிச் செல்லாது தடுத்து நிறுத்துதல். இருமையும் - பெருமை சிறுமையாகிய இரண்டையும். புரை - குற்றம்.

மன ஒருமைப்பாடுடையவர் குற்றமின்றி இருமையும் உணர்ந்திருந்தார் என்பதாம். 21

134 புரைஅற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரைஅற்ற சிந்தைநல் ஆரியன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே.

குறிப்புரை :- ஆரியன் - ஞானாசிரியன். பாலில் கலந்துள்ள நெய்போல ஆசிரியன் மனத்துள் கூடியிருப்பான் எனக. உரையற்றுணர்தல் - மவுனோபதேசம் பெறுதல் செப்பும் உரையே மவுனோபதேசம் என்க சத்து - நித்தியம்.

நல்லாசான் மவுனோபதேசத்தைப் பெறுபவர் நித்திய புருஷராவார் என்பதாம். 22

135 சத்த முதல்ஐந்தும் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற்சுடர் சேரும்
அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே.

குறிப்புரை :- சத்த முதல் ஐந்து - தன் மாத்திரை ஐந்து. தன்வழிச் சாரலாவது, அகங்காரத்தில் ஒடுங்கலாம். சித்து, முன்னது ஆன்மா பின்னது சிவன். அத்தம் - பொருள்.

ஆண்டுகொள் அப்பிலே என்பது. நீரைத் தெளிவிப்பது போன்று தெளிவிப்பாயாக என்றபடி. நீரில் தேற்றான் விதையை இழைத்துச் சேர்த்தால் நீர் தெளியும்; அதுபோல் சீவனில் சிவகுரு கலந்தபோது மனம் தூய்மையுறும் என்க.

சீவன் சிவனோடு தூய்மையுற்றுக் கலக்கும் என்பதாம். 23

136 அப்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே.

குறிப்புரை :- கூர்மை - உவர்ப்புத்தன்மை. ஆதித்தன் - சூரியன். அவ்வுரு - உப்பின் உருவம். நீரில் கலந்த உப்பு நீரின் தன்மையாய்க் கரைந்துவிடும் என்க. செப்புதல் - சொல்லுதல். சிவத்துள் அடங்குதலாவது, சீவத்தன்மை கெட்டு அடங்குதலாம்.

நீரில் உப்பு கலந்திருப்பதுபோல் சிவத்தில் சீவன் அடங்கி யிருக்கும் என்பதாம். 24

( தொடரும் )





# திருவையாற்றுப் பதிற்றுப்பத்தந்தாதி*

## மூலமும் – உரையும்

உரையாசிரியர் :-

பண்டித வித்துவான், தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

**திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை**

நூல்

## கடவுள் வாழ்த்து

காப்பு

( அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம் )

சீர்பூத்த செழுந்தரளத் திரள்கொழிக்குந்
திரைப்புணரி சிறந்து சூழும்
பார்பூத்த வையாற்றுப் பரசிவன்றுள்
மேற்பதிற்றுப் பத்தந் தாதி
பேர்பூத்த விசையலங்கல் நவின்றணிவான்
முக்கணிளம் பிறையை யேய்ப்ப
வேர்பூத்த வொருகோட்டைங் கரக்கருணை
மதகரிதா ளிறைஞ்சி வாழ்வாம். 1

காப்பு - காவல். காத்தல் என்பது பொருள், அஃது ஈண்டு இடையூறு வராமல் காக்கும் கருணைக்கடவுளின் பொருளான வணக்கத்தைக் குறிக்கும். ஆகவே கவி தான் தமக்குறும் ஊற்றினை நீக்கித் தம் எண்ணத்தினை முற்று விக்கும் இறைமைப் பொருளினைப் போற்றுதல் என்பது பொருளாம்

கவிதான், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாவது வழிபடு கடவுளையாவது வாழ்த்துதல் மரபு. அவற்றுள் இவ்வாழ்த்து வழிபடுகடவுளையெனக்கோடல்

---

* திருவையாறு ஸ்ரீ முத்துச்சாமிபாரதி என்னும் நடேசதாசர் அவர்கள் இயற்றியது.

வேண்டும். சைவ நன்மக்களாயினூர். முதன் முதலில் எத் தொழில் புரியத் தொடங்கினும் கணபதி வணக்கங்கூறிப் பின் எடுத்துக்கொண்ட அத்தொழில் புரியத் தொடங்குவது வழக்கு. அம்முறைபற்றியே இவ்வாசிரியரும் கூறுங்கடப்பாட்டின ராயினர்.

இனிப் பாட்டின் பொருள் வருமாறு :- சீர்பூத்த செழும் தரளம் திரள்கொழிக்கும் - செழுமையாகிய வளப்பம்பொருந் திய (நல்ல) முத்துக்குவியலை கரையினிற் கொண்டுவந்து ஒதுக்கும் (சேர்க்கும்). திரைப்புணரி சூழும் - அலைகளுடைய கடலாற் சூழப்பட்ட, பார் - பூமியின்கண், சிறந்துபூத்த - மேம் பட்டுத் தோன்றியிரா நின்ற, ஐயாற்றுப் பரசிவன் தாள்மேல் - திருவையாறு எனுங்காரணப் பெயரினையுடைய திருத்தலத் தின்கண் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள, பரசிவனு கிய ஐயாற்றீசன் திருவடிக் கமலங்களின்மேல், பதிற்றுப்பத்து அந்தாதி - பத்துப் பத்து வகையாக நூறு செய்யுள் பாடப் பெறுதலால் பதிற்றுப்பத்தந்தாதி யென்று சிறப்பித்து ஓதப் பெறும் சிறுகாப்பிய அமைதியுடைய, பேர்பூத்த இசை அலங் கல் - பெருமை பொருந்திய கீர்த்தியாகிய மாலையினை, நவின்று அணிவான் - நன்கு இனிதாய்த் தொடுத்து அணிவதற்காக, முக்கண் - சோமன்சூரியன் அக்கினி என்னும் மூன்று கண்களை யும், இளம்பிறையை ஏய்ப்ப - இளமையாகிய பிறைமதியை ஒத்த, ஏர்பூத்த ஒருகோடு - அழகுபொருந்திய (வளைந்த) ஒரு கொம்பினையும், ஐம்கரம் - ஐந்து திருக்கரங்களையும். கருணை மதம் - அருளாகிய மதப்பெருக்கினையும் உடைய, கரி - யானை முகக்கடவுளாகிய விநாயகப்பெருமானுடைய. தாள் - திருவடி களை இறைஞ்சி வாழ்வாம் - மனம்வாக்குக் காயங்களினுல் வழி பட்டு (யாம்) வாழ்வாம் என்றவாறு

குறிப்புரை:- யாம் எழுவாய். வாழ்வாம் பயனிலை. அந்தம் ஆதி - அந்தாதி. அந்தமுதலாத் தொடுப்பது அந்தாதி என்பது (யாப்பியல்) முத்துக்கள் தோன்றுமிடம் இருபதாம். அது வருமாறு :-

" தந்திவராக மருப்பிப்பிம் பூகந் தழைகதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னுர்
கந்தரஞ் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து வுடும்பு கராவினு முத்தம் இருபதுமே "

என்பதாம்.

இப்பி - கிளிஞ்சல். இதுகடல்படு திரவியங்களில் ஒன்று. இப்பியினின்று முத்துக்கள் தோன்றுவது இயற்கை. முத்துக் குளிப்பதுங் கடலிடையேதான். அவற்றுள் கடலிடைப் பிறக்கும் முத்துக்களே சாலச்சிறந்தனவாம். ஏனையவற்றினின் றும் எடுப்பதும் காண்டலுமரிதாம். கடலுக்கு இரத்தினகரம் என்று பெயராம். பவழம், முத்துபோன்றவை குவியலாகத் தங்கியிருக்கப்பெறும் இடம் என்பது பொருள். சீர் மங்கல முதன்மொழி. கொழித்தல் - கரையிற் கொணர்ந்து ஒதுக்கு வது. திரைதலின் திரையாயிற்று, (திரை - மடங்கல்). ஐயாறு இதற்குப் பஞ்சநதி என்பர். சப்பேசர் என்னும் திருநந்தி தேவருக்கு, உமையம்மையார் திருமுலைப்பால், இடபதேவராகிய குணநந்திவாய் நுரைநீர், மேகநீர் (கொண் டல்நீர்), கங்கைநீர், பிரமன் கமண்டலநீர் ஆகிய ஐந்து தீர்த்தங்களையும் கொண்டு அபிடேகித்தபடியால் ஐயாறு வந்ததென்பர். ஐந்து வழியாகச்செல்லும் நெறியொடுங்கி இறைவனருள் பெறுமிடம் எனவுங்கூறுவர். அப்பர்பெருமா னுக்கு ஒப்பிலாக் கயிலைக்காட்சி கொடுத்தருளிய மாட்சித்து ஆகலின் இவ்வூர்ப்பரமற்கு ஐயாற்றுப் பரசிவன் எனப்பெயர் போந்தது. இசை - ஓசை, புகழ். நவின்று - பாடி (யாத்து).

## சபாநாயகர் துதி

(எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

அருமறைப் பொருளாய் விரிஞ்சன்மாற் கரிதாய்
அடியவ ரின்பினுக் கெளிதாய்
இருமுனி வரர்கள் பருகுமா ரமுதாய்
எண்ணிலா வுயிர்களுக் குயிராய்
கருதிய நால்வர்க் கரும்பொரு ளுரைத்த
காட்சியாய்ப் பொற்பொது வெளியுள்
திருநடம் புரியும் பேரருள் வடிவைச்
சிந்தையு ளிருத்தியின் படைவாம்.

(இ - ள்) அருமறைபொருள் ஆய் - அறிதற்கு அரிய வேதங்களின் உள்பொருளாகி, விரிஞ்சன்மாற்கு அரிதுஆய் - பிரமனுக்கும் திருமாலுக்கும் காண்டற்கு அரிய அடிமுடிகளை

யுடைய அழலுருவாகி, அடியவர் அன்பினுக்கு எளிதுஆய் - பற்றற்ற தொண்டருடைய அன்புச்செயலுக்கு எளியபொருளாகி(காண்டற்கு எளிமையாகி) இரு முனிவர்கள் பருகும் ஆர் அமுதுஆய் - புலிக்கால் முனிவரும் அனந்தனும் ஆகிய பதஞ்சலிவியாக்கிரபாதர் எனும் இரண்டு முனிவர்களும் கண்டுகளிக்கும்படியாகவுள்ள அரிய தேவஅமிர்தாய், எண் இலாத உயிர்களுக்கு உயிர் ஆய் - கணக்கு அற்ற உயிர்களுக்கு எல்லாம் உயிர்த்தன்மையாகி, கருதிய நால்வர்க்கு அரும்பொருள் உரைத்த காட்சிஆய் - முப்பொருள் முன்னிய சனகாதி நான்கு முனிவர்கட்கும் அறிதற்கரிய பரஞானமாகிய அநுபவப்பொருளை கல்லாலின்புடையமர்ந்து குருவடிவாகி யுரைத்த காட்சிப் பொருளாகி, பொன்பொது வெளிஉள் - பஞ்சசபைகளிலொன்ருகிய பொன்மன்ற வெளியின்கண், திருநடம்புரியும் - ஐந்தொழிலாகிய ஆனந்த தாண்டவம் புரிந்தருளும், பேர்அருள் வடிவை - பெரிய கருணைத் திருவுருவை, சிந்தை உள் இருத்தி - மனத்தின்கண் அகலாதவாறு தியானத்து எழுந்தருளப்பண்ணி, இன்பு - பேராவியற்கையாகிய பேரின்பினை, அடைவாம் - அடைவோமாக. (எ - று)

குறிப்பு :- பிரமன் மாற்கரியோன், அடியாற்கெளியன், பதஞ்சலிவியாக்கிரபாதர்கட்கருநடம்புரியுமண்ணல், ஆலமர் செல்வன், முதலிய பெயர்கள் கருதத்தக்கன. நால்வர் - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்பவர். காட்சி - போதக்காட்சி. அருமறையினகத்தானை என்பதும் குறித்துணரத்தக்கது ஐந்தொழில் நடம், படைப்பு. காப்பு, அழிப்பு. மறைப்பு, அருளல்ஆம். திருச்சிற்றம்பலம் என அழைத்தல் பெற்றிகொண்டு சபாநாயகர்துதி முன்னர்க் கூறினர்போலும், காஞ்சிப்புராணத்தாலும் இது அறியக்கிடக்கும். நினைப்பவர்மனங் கோயிலாக்கொளும் நின்மலனை நெஞ்சினிலிருத்தி யின்படைவாம் என்பதும் ஆராயத்தக்கதாம். யாம், எழுவாய், அடைவாம், பயனிலை; இன்பு செயப்படுபொருள்.

(தொடரும்)



# செய்திகள்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களின்

## திருச்செந்தூர் வழிபாடு

திருத்தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஆண்டுதோறும் கந்தசஷ்டி விழாவிற்குத் திருச்செந்தூர் எழுந்தருளி கந்த விரதம் மேற்கொண்டு ஸ்ரீ செந்திலாண்டவனை வழிபட்டு வருதல்போல இவ்யாண்டிலும் திருச்செந்தூருக்கு எழுந்தருளினார்கள். கந்தசஷ்டி விழாத் திருநாட்களில் நாடோறும் திருக்கோயிலுக்கு எழுந்தருளி செந்திற்குமரனைத் தரிசித்து இன்புற்றார்கள்.

தருமையாதீனத் திருக்கோயில்களில்

## நவராத்திரி விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கோயில்களில் நவராத்கிரி விழா மிகச்சிறப்பாக நிகழ்ந்தேறியது. மலைமகளும், அலைமகளும, கலைமகளுமாக பராசக்தி அன்னை கொலுவீற்றிருந்து அடியார்கட்கு வேண்டுவன நல்கும். இத்திருநாட்களில், அன்னையின் அளப்பில் ஆற்றல்களும், அருள் வழங்கும் திறமும் - பேசும் ஒப்பற்ற ஞான நூல்கள் அவ்வத் திருக்கோயில்களில் சிந்திக்கப்பெற்றன. தமிழும் - சமயமும் வல்ல பெருமக்கள் நவராத்திரித் திருநாட்களில் அம்பிகையின் அருளிப்பாட்டைப் பேசும் அருள் நூல்களை விளக்கிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். பல்வேறு திருநாமங்களில் அங்கங்கே எழுந்தருளி அருள் வழங்கும் ஆதி சக்திக்கு விழாநாட்களில் விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் நிகழ்த்தப்பெற்றன. மெய்யன்பர்கள் திரளாக வந்து அம்பிகையைத் தரிசித்தும், அன்னையின் அருள் கேட்டும் உய்ந்தனர்.

## சொற்பொழிவு நிகழ்ச்சிகள்

**சீகாழி :**

ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் 6—10—70இல் திரு. தி. வ. காந்திமதிநாதன், "மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்" பற்றியும், 7—10—70 இல் திரு. அ கலியபெருமாள் "அபிராமி

அந்தாதி'' பற்றியும், 9—10—70 இல் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் ''அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்'' பற்றியும உரை யாற்றினர்.

வேலூர் :

ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்கானத்தில் 6—10—70 அன்று திரு. வி. சா. குருசாமி தேசிகர் 'திருவெண்ணீற்றுமைப் பிள்ளைத்தமிழ்' பற்றியும் 7 0—70 அன்று திரு. இராம பத்திரன் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' பற்றியும் 8—10—70 அன்று திரு. எம். சுந்தரேசம் பிள்ளை 'அபிராமி அந்தாதி' பற்றியும், சிறப்புரை நிகழ்த்தினர்.

திருக்கடவூர் :

ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் 6—10—70 அன்று திருமதி ப. நீலா 'காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்' பற்றியும், 8—10—70 அன்று திரு கே. கே. நடராசன் 'மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ்' பற்றியும், திரு. வி. சபேசனர் 'அபிராமியம்மை பதிகம்' என்பது பற்றியும் சொற்பொழிவு ஆற்றினர்.

திருபுவனம் :

ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 6—10—70 ஆம் நாள் திரு. வி. சபேசனர் ''மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'' என்ற இலக்கியத்தையும், 7 10—70 ஆம் நாள் திரு. ப. சிவராம கிருஷ்ணன் ''காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்'' என்ற இலக்கி யத்தையும், 8—10—70 ஆம் நாள் திரு. வி. சா. குருசாமி தேசிகர் ''அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்'' என்ற இலக்கியத்தையும் விளக்கிப் பேசினர்.

திருக்குவளை :

ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் 6—10—70 இல் திரு. இரா. செல்வக்கணபதி ''அபிராமி அந்தாதி''யையும், 7—10—70 இல் திரு கு. சுந்தரமூர்த்தி ''மீனாட்சியம்மை பிள்ளைத் தமி''ழையும், 8—10—70 இல் திரு. தா ம வெள்ளைவாரணனர் ''அமுதாம்பிகைப் பிள்ளைத்தமி''ழையும் விரித்துரைத்தனர்

திருவையாறு :

ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 6—10—70 ஆம் நாளில் திரு. எம். சுந்தரேசம் பிள்ளை 'அமுதாம்பிகை பிள்ளைத்

தமிழ்' என்பதுபற்றியும், 7—10—70இல் திரு. கே. எம். வேங்கடராமையா 'அபிராமி அந்தாதி' என்பதுபற்றியும், 8—10—70இல் திரு. இரா. செல்வக்கணபதி 'திருவெண்ணீற்றுமையம்மை பிள்ளைத்தமிழ்' என்பதுபற்றியும் விளக்கவுரையாற்றினர்

**திருப்பனந்தாள் :**

ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 6—10—70 இல் திரு. சொ. சிங்காரவேலனர் 'கோமதியம்மை பிள்ளைத்தமிழ்' பற்றி உரையாற்றினர். 7—10—70இல் திரு. ஆர். வேலாயுத ஓதுவார் 'குங்கிலியக் கலயர்' வரலாற்றை இன்னிசைக் கதை' யாக விரித்துரைத்தார் 8—10—70 இல் திரு. சி. அருணவடிவேல் முதலியார் 'அறம்வளர்த்த நாயகி' யின் சிறப்பினை விளக்கினர்.

**பேரளம் :**

ஸ்ரீ சுயம்புநாதசுவாமி தேவஸ்தானத்தில் 7—10—70இல் திரு. ச. அரங்கசாமிபிள்ளை 'சகலகலாவல்லிமாலை' என்பது பற்றி உரையாற்றினர்.

**குத்தாலம் :**

ஸ்ரீ உக்தவேதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 7-10-70இல் திரு. பி. நடராசன் 'அபிராமி கடைக்கண்கள்' வழங்கும் அருளை விரித்துப் பேசினர்.

**ஆச்சாள்புரம் :**

ஸ்ரீ சிவலோகத் தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் 7—10—70இல் திரு வே. கண்ணப்பன் 'திருவெண்ணீற்றுமையம்மை பிள்ளைத்தமிழ்' பற்றிச் சிறப்புரையாற்றினர்.

## வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கு கந்தசஷ்டிப் பெருவிழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமிக்கு 30—10—70 முதல் 8—11—70 முடிய கந்தசஷ்டிப் பெருவிழா மிகச் சிறப்பாக நிகழ்ந்தேறியது.

கந்தசஷ்டி நாட்களில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கும் ஸ்ரீ அறுமுகப்பெருமானுக்கும் ஷண்முகார்ச்சனை ரூபமாக லட்சார்ச்சனை நடைபெற்றது. நாடோறும் காலை 6 மணி, பகல் 12 மணி, மாலை 6 மணி ஆகிய மூன்று நேரங்களில் அர்ச்சனைகள் தொடங்கி, நிகழ்த்தப்பெற்றன. 4—11—70

கந்தசஷ்டியன்று ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி ஸ்ரீ பாலாம்பிகா சமேத ஸ்ரீ வைத்தியநாதசுவாமியிடம் வேல்பெற்று, சூரனைச் சங்கரித்து மயில் வாகனத்தில் எழுந்தருளினார். 6—11—70 இல் ஸ்ரீ தெய்வயானைத் திருமணமும், 7—11—70 இல் ஸ்ரீ வள்ளியம்மை திருமணமும் சிறப்பாக நடைபெற்றன. 8—11—70 இல் ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேதராக ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி வெள்ளி இரதத்தில் வலம்வரும் விழா இனிது நிகழ்வுற்றது. சண்முகார்ச்சனையில் பங்குபற்றியும், ஸ்ரீ முருகப்பெருமானைத் தரிசித்தும் அன்பர்கள் உய்திபெற்றனர்.

விழாவை ஒட்டி நாடொறும் மாலை 6 மணிக்குத் தொடங்கி, பிரசங்கசபா மண்டபத்தில் கந்தபுராணச் சொற்பொழிவுகள் சிறப்பாக நிகழ்வுற்றன.

30—10—70 இல் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் "உற்பத்தி காண்டம்" பற்றியும், 31—10—70 இல் திரு. வி. சா. குருசாமி தேசிகர் "அசுர காண்டம்" பற்றியும், 1—11—70 இல் திரு. வி. சபேசனார் "மகேந்திர காண்டம்" பற்றியும், 2—11—70 இல் திரு. க. வெள்ளைவாரணனார் "யுத்த காண்டம்" பற்றியும், 3—11—70 இல் திரு. சொ. சிங்காரவேலனார் "தேவ காண்டம்" பற்றியும், 4—11—70 இல் திரு. இரா. செல்வக்கணதி "தட்ச காண்டம்" பற்றியும் விரிவுரை நிகழ்த்தினர்.

### மாயூரம் குமரக்கட்டளை
### ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்தில்

## கந்தசஷ்டி விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான மாயூரம் குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்தில் 30—10—70 முதல் 4—11—70 முடிய கந்தஷஷ்டி விழா சிறப்புற நிகழ்ந்தேறியது. கந்தசஷ்டியை ஒட்டி ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு இலட்சார்ச்சனை 20—10—70 இல் தொடங்கப்பெற்று 4—11—70 இல் முடிவுற்றது. அர்ச்சனையில் அன்பர்கள்பலர் பங்குபற்றி வழிபட்டு உய்ந்தனர்.

விழாவை ஒட்டி 30—10—70 முதல் 4—11—70 முடிய பிரசங்க சபா மண்டபத்தில் நாள்தோறும் மாலை 6 மணிக்குத் தொடங்கி புலவர். திரு. கீரன் அவர்களால் "கந்தபுராணத் தொடர்ச் சொற்பொழிவு" நிகழ்த்தப்பெற்றது. மக்கள் திரளாகக் கூடி விரிவுரை கேட்டு மகிழ்ந்தனர்.




திரு. K. முத்துஜோதிடர்

(சாதாரணஸு கார்த்திகைமீ 1வ முதல் 30வ முடிய)
(16—11—70 முதல் 15—12—70 முடிய)

ஷ கார்த்திகைமீ முதல்தேதி மாலை 25 நாழிகை 30 வினடிக்கு 4-ம் யாமத்தில் சனி நின்ற மேஷ லக்னத்தில் ஸ்ரீ லோகரக்ஷக ரான ஸ்ரீ சூரியபகவான் விருச்சிகராசி பிரவேசம் செய்கிறர். பிரவேசகாலபலன் ரொம்ப தோஷயுக்தமாய் அமைந்திருக்கிறது. நாளது தேதி முடிய நடந்துவரும் சுபங்களுக்கு மாருக பிரவேச காலம் இருப்பதால் உலகைக் காப்பதற்கு ஸ்ரீ பகவான் தாமதியா மல் பூமியில் அங்காங்குத் தோன்றி பயத்தைப்போக்கடித்து சுபிக்ஷத்தையும் கொடுத்தருள பிரார்த்தனு பலம்தான் மூக்கியம். கடவுள் துணைபுரிவாராக. சுபம்.

1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தையே தரும். தூரதேசத்திலிருந்து அழைப்புப்பத்திரம் வந்து சேரும். சஞ்சாரபலன் அதிகமாகும். வியவகாரம் ஜெயிக்கும். ஈதி பாதைகளால் நடுவில் சில தாமதங்கள் உண்டாகும். மேலோர் பெரியோர்களின் ஆசிகள் கிடைக்கும். ஜீவன சுகம் உண்டா கும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

விருஷபராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத்தரும். தொழில் மூலம் சதா அலைச்சல்களை உண்டுபண்ணும். ஸ்திர மில்லாமல் ஜீவனம் ஏற்படும். மனம் நிம்மதியாக இருக்காது. வரவு. செலவு சமமாக இருக்கும். புதன் வியாழன் சுபமாகும்.

3. மிதுனம் – மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபமான பலனைத் தரும். இல்லற சுகம் ஓங்கும். அடிக்கடி சஞ்சாரமும் உறவினர் களுடைய சேர்கையும் ஏற்படும். ஜீவனம் விருத்தியாகும். ஸ்திரமான லாபம் ஏற்படும். ஆரோக்யம் தரும். வெள்ளி, சனி, சுபமாகும்.

**4. கடகம் – புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

கடகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். விவசாய காரியங்கள் தாமதப்படும். ஈதிபாதைகள் உண்டுபண்ணும். வீண் செலவுகளும், காரியத்தில் தடங்கலும் ஏற்படச்செய்யும். மாதக்கடைசியில் சுபங்கள் விருத்தியும், சகலகாரிய விருத்தியும் ஏற்படும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

**5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் $\frac{1}{4}$.**

சிம்மராசி 9 பாதங்களும், பூர்ணமாக சுபத்தையே தரும். ஜீவனலாபம் கிடைக்கும். மேலோர், பெரியோர்களின் அன்பினுல் சகல காரியங்களும் சாத்தியமாகும். கிரகசுகம் உண்டு பண்ணும். சகோதரர்கள், சிநேகிதர்கள் சேர்க்கை ஏற்படும். செவ்வாய், புதன் சுபமாகும்.

**6. கன்னி – உத்திரம் $\frac{3}{4}$ – ஹஸ்தம் – சித்திரை $\frac{1}{2}$.**

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். தெய்வபலம் பிரகாசிக்கும். தவக்கப்பட்ட காரியங்கள் எல்லாம் சுலபமாக சாத்தியமாகும். நஷ்டமான பொருள்களும், கொஞ்சம் கொஞ்சமாக வந்துசேரும். சத்ருக்கள் சரண் அடைவார்கள். ஈதிபாதைகளால் சஸ்யதான்யங்கள் கொஞ்சம் சேதம் ஏற்படும். அதுவும் இயற்கையின் பலத்தால் நன்மையாக ஆகும். உலக பிரசித்தியும், கீர்த்தி பத்திரமும் கிடைக்கும். செலவினங்கள் அதிகமாகாமலே இருந்துகொண்டு இருக்கும். ஆரோக்யம் தரும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**7, துலாம் – சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

துலாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலன் தரும். செலவினங்கள் அதிகமாகும். எதிர்பாராத காரியங்களால் அதிகமான செலவுகள் ஏற்படும். ஈதிபாதைகளால் சிரமம் உண்டாகும். சகலமான காரியங்களும் தெய்வபலம் உள்ளவர்களுக்குச் சுலபமாக நடக்கும். இடைக்காலங்களில் எதிர்பாராத லாபங்கள் உண்டாகும். சனி, ஞாயிறு சுபமாகும்.

**8. விருச்சிகம் – விசாகம் $\frac{1}{4}$ – அனுஷம் – கேட்டை.**

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அடிக்கடி வியாதிகளால் பயம் உண்டாகும். வைத்திய செலவுகள் அதிகமாகும். எல்லாக் காரியங்களும் தவக்கப்படும். இயற்கைக் கோளாறுகளால் சிரமம் ஏற்படும். சாதுக்கள், பக்தர்கள், நல்லவர்கள் இவர்களுக்கு எல்லாம் நன்மையாக இருக்கும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$.

தனுர்ராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். ஸ்திர ஜீவனம் ஏற்பட்டு இல்லறவாழ்க்கை ஓங்கும். புத்திராதிகளால் குடும்பம் ஓங்கும். புதிதான முறையாலும், சிநேகிதர்கள் மூலமாயும், தொழில் விருத்தியாகும். தெய்வபலம் பிரகாசிக்கும். புதன், வியாழன் சுபமாகும்.

10. மகரம்– உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$.

மகரராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத் தரும். உத்தியோகத்தில் உயர்பதவி ஏற்படும். உலகபிரசித்தி ஏற்படும். தெய்வபலம் ஓங்கும் ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் சேரும். மனம் சாந்தி அடையும். வம்சம் விருத்தியாகும். வெள்ளி, சனி சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் – பூரட்டாதி $\frac{3}{4}$,

கும்பராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும், அதிக உழைப்பும், பிரயாசையும் ஜாஸ்தியாகும். அடிக்கடி தொழில் மாறும். விவகாரம் ஜெயிக்கும். பெரியோர்களின் ஆசியினால் சகலமும் நன்மை ஆகும். வியாதி நிவர்த்தியாகும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். ஜீவனம் ஓங்கும். இல்லற சுகம் ஏற்படும். புத்திராதிகளால நன்மை உண்டாகும். அடிக்கடி சஞ்சாரபலனும், தேவதாகுரு தரிசனங்களும் ஏற்படும். சகல காரியங்களும் சித்தியாகும். தெய்வபலம் பிரகாசிக்கும். ஆரோக்யம் தரும், சுபம் உண்டாகும். செவ்வாய், புதன் சுபமாகும்.

குறிப்பு :- ஷை கார்த்திகை மாதம் கிரஹ அமைப்பு ஒரே மாதத்தில் ஒரே நக்ஷத்திரத்தில், ஒரே திக்கில் குரு. சுக்கிரான் இருவரும் உதயத்தை அடைவதின் பலனும், சூரியன் விருச்சிக பிரவேசகால பலனும் பூமிக்கு சோதனைக்காலமாகும். பூமி உள்ள இடமெல்லாம் மனுஷ்ய தேவர்களால் அநேகம் அற்புதங்கள் ஏற்படச்செய்யும். கடவுள் ஒதுங்கி நிற்காமல் ஆங்காங்கு பல ரூபமாய்த் தோன்றி, உலகைக் காப்பாற்றி சுபிக்ஷமடையச் செய்ய எல்லா பிரஜைகளும் சேர்ந்து பிரார்த்தனை செய்ய வேணும் கடவுள் காப்பார். நாஸ்திகம் இல்லாமல் சதா தெய்வசிந்தனையே வேணும். தர்ம பூமிகள் காப்பாற்றப்படும். சுபமுண்டாகும்.

# ஞானக்களிற்றின் முன்

# மானக்களிறு மாண்புற்றது

அணில், ஆமை, ஈ. எறும்பு, கரிக்குருவி, காகம், நண்டு, நாரை முதலிய விலங்கும் பறவையும் இறைவனை வழிபட்டு அருள் நலம்பெற்ற தலபுராண வரலாறுகளைப் படிக்கின்றோம்.

திருவானைக்கா என்னும் தலத்தில் வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளியிருந்த பெருமானை யானைவழிபட்டுஅருள் பெற்ற வரலாற்றை அனைவரும் அறிவர்.

'விறல்மிக்க கரிக்கு அருள் செய்தவனே' என்று ஞானசம்பந்தர் இதனைப் போற்றி யுள்ளார். திருக்கானப்பேர் என்னும் தலம் யானை வழிபட்ட தலம்.

"மானமா மடப்பிடி வன்கையால் அலகிடக்
கானமார் கடகரி வழிபடும் கானப்பேர்"

என்பது தேவாரம். திருக்காளத்தி யானைவழிபட்ட தலம். வெள்ளையானை தனக்கேற்பட்ட சாபம் நீங்க மதுரைமாநகரை அடைந்து இறைவனை வழிபட்டு அருள்பெற்ற வரலாற்றைத் திருவிளையாடற்புராணம் கூறுகிறது. இவ்வாறு யானை வழிபட்ட சிறப்பைத் திருமுறைகளும் தலபுராணங்களும் பலஇடங்களில் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

மனிதனுக்கு மட்டுமே கடவுள் வழிபாடு உரியது என்று எண்ணுதல் கூடாது. எல்லா உயிர்களுக்கும் நாதனாக விளங்கும் அப்பரம் பொருளை முன்னைய உணர்வு தலைக்கூட்ட ஜீவராசிகள் பலவும் வழிபட்டு அருள் பெற்ற வரலாறுகள் பல உள்ளன. அவை ஆறறிவு படைத்த மனிதனுக்கு நல்லறிவு புகட்டுவன வாகவும் உள்ளன. இவ்வரலாறுகள் கற்பனை அல்ல என்பதை நினைவூட்டும் வகையில் இக்காலத்திலும் பல தலங்களில் விலங்குகளும் பறவைகளும் இறைவனை வழிபடும் காட்சியை நாம் காண்கிறோம்.

அண்மையில் சீகாழியில் நடந்த நிகழ்ச்சி இவ்வரலாறுகளை மெய்ப்பிக்கும் வகையில் எல்லோர் மனத்தையும் நெகிழ்விக்கும் என்பது உறுதி.

நமது தருமையாதீனம் சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி திருக்கோயிலில் இறைவன் திருவிழா நிகழ்ச்சிகளில் பங்குகொண்டுவந்த யானையை அனைவரும் அறிவர். கஜலக்ஷணங்கள் அனைத்தும் பொருந்திய இவ் யானை ஆதீன தேவஸ்தான யானைகள் அனைத்திற்கும் தலைமையாய் அணிவகுத்து நிற்கும் காட்சி தனி அழகைத்தரும். இக்கோயிற் பணியில் ஐம்பது ஆண்டுகளாகப் பங்குகொண்டிருந்த இந்தயானையின் அமைதியான நடைமுறைகளைக் கண்டோர் வியப்பர். அதன் வாழ்நாளில் யாருக்கும் எந்தச்சிறு தொல்லையும் தாராமல் இறையருள் வயமாய் வாழ்ந்தது இந்தயானை.

நாடோறும் திருக்கோயில் நிகழ்ச்சிகளில் பங்குபற்றிய இவ் யானை அண்மையில் சில நாட்களாக நோயுற்றிருந்தது. நல்ல மருத்துவர்களைக்கொண்டு நோய்நீக்கம்செய்ய முயற்சி செய்யப்பெற்றது. முதுமையான அந்தயானையின் நோயைக் குணப்படுத்தமுடியாத நிலையில் மருத்துவசிகிச்சை பயன் தராது எனக் கூறி யானையை அதன்போக்கில் அவிழ்த்து விட்டுவிடும்படிச் சொன்னார்கள். அவிழ்த்துவிடப்பட்ட யானை தனக்கு இறுதி வருவதை உணர்ந்து மெதுவாக நடந்து திருஞானசம்பந்தர் திருக்கோயில் சந்நிதியின் வாயிலில்நின்று கொண்டே இருந்தது. இரண்டு நாட்கள் அந்தச் சந்நிதியிலேயே நின்றுகொண்டு இருந்தது 4—11—70 புதன்கிழமை கந்தசஷ்டித் திருநாள் இறைவன் திருவடி அடையும் இனிய நாள் என்பதை உணர்ந்ததுபோலும். யானை திருக்கோயிலை வலம்வந்து ஞானசம்பந்தர்கோயில் வாயிலைக் கடந்து உள்ளே சென்று ஞானசம்பந்தர் சந்நிதியில் நின்று மூன்று முறை முன்காலைமடக்கி துதிக்கையைஉயர்த்தி ஓங்காரக்குரல் எழுப்பி வீழ்ந்து வணங்கியது. வணங்கிய அந்நிலையிலேயே இறைவன் திருவடியை அடைந்தது. இந்நிகழ்ச்சியை அன்பர்கள் பலரும் வந்து கண்டு உளம்நெகிழ்ந்து வியந்து வணங்கிச் சென்றனர். யானையின் உடல் உரிய சிறப்புக்களோடு திருவீதிவலம் வரச்செய்து அடக்கம் செய்யப்பெற்றது.






சீகாழிக்கோயிலுக்குக் காவலாகவும் இது விளங்கிவந்தது. சில ஆண்டுகளுக்குமுன் இக்கோயில் விமான கலசம் களவு போக இருந்தபோது கள்வனைக் காட்டிக்கொடுத்து திருட்டு நேராமல் தடுத்த பெருமை இவ்யானைக்குரியது. அதனைப் பாராட்டி நமது தமிழக அரசு வீரசங்கிலியும் மெடலும் வழங்கிப் பெருமை செய்தது.

ஒரு சிறு நிகழ்ச்சி :

ஒருநாள் இத்தெய்விக யானைக்குத் தீனிவைக்கப்பெற்றது. அதில் ஒருசிறிது வெளியே சிதறியிருந்தது. காக்கைகள் ஒருசில அவற்றைப் பொருக்கித்தின்றன. இவ் யானையின் பாதத்தின் அடியில் சிதறிய அரிசியைக் கொத்தித் தின்ன ஒரு காக்கை முற்பட்டது. இதனை அறிந்த இது தன் காலை தூக்கிக்கொண்டது அங்குள்ளவற்றை அக்காகம் தின்று வெளிச்செல்லும் வரை காலைத் தூக்கியபடியே நின்றிருந்தது. இதுபோன்ற கருணைகாட்டும் செயல்கள் பல நிகழ்த்தியிருக்கிறது.

---

( அட்டை 3 ஆம் பக்கத் தொடர்ச்சி )

8—12—70 திருக்கடவூர் 4 ஆவது சோமவார 1008 சங்காபிஷேகப் பிரசாதம் வழங்கும் விழா. தலைவர் திரு. K. கமலக்கண்ணன்.

11—12—70 திருக்கார்த்திகைத் திருவிழா. தலைவர் திரு K. E அருணாசல முதலியார் M. A. B. Com.
பேச்சு திரு. B, C. லிங்கம்.
கணம்புல்ல நாயனர் குருபூஜை. புராணவிரிவுரை திருமதி மீனாட்சிசுந்தர சிவை.

12—12—70 வேளூர்க் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா, தலைவர் திரு. S. வடிவேல் பிள்ளை B. A. L T.

13—12—70 ஞாயிறு வாரச்சொற்பொழிவு, சிவானந்தலகரி ஆங்கீரச திரு. S. வேங்கடேச சர்மா.

15—12—70 திருக்கடவூர் 5ஆவது சோமவார 1008 சங்காபிஷேகப் பிரசாதம் வழங்கும்விழா. தலைவர், திரு. G. M. முத்துசாமி பிள்ளை I. A. S. (ஓய்வு)

தருமையாதீனம்

# சென்னை சமயப்பிரசார நிலைய நிகழ்ச்சிகள்

13—11—70 நெடுமாற நாயனார் குருபூஜை. புராண விரிவுரை வித்துவான், திரு. ப. வடிவேல் பிள்ளை.

14—11—70 இடங்கழி நாயனார் குருபூசை. புராண விரிவுரை வித்துவான், திருமதி. மீனாட்சிசுந்தர சிவை.

15—11—70 வேளூர்க் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா தலைவர். திரு. V. N. ஆறுமுகம் B. Com.

17—11—70 திருக்கடவூர் கார்த்திகைமாதம் முதல் சோமவார 1008 சங்காபிஷேகப் பிரசாதம் வழங்கும் விழா. தலைவர் திரு. R. சிவஞானம் செட்டியார்.

22=11—70 ஞாயிறு, வாரச்சொற்பொழிவு, 'சிவானந்தலகரி' ஆங்கீரஸ திரு. S. வேங்கடேச சர்மா.

23—11—70 மெய்ப்பொருள் நாயனார் குருபூஜை, புராண விரிவுரை, திரு. ப. வடிவேல் பிள்ளை.

24—11—70 திருக்கடவூர் 2 ஆவது சோமவார 1008 சங்காபிஷேகப் பிரசாதம் வழங்கும் விழா. தலைவர் திரு. P. திருஞானசம்பந்தம் பிள்ளை M. A. L. T.
ஆனாய நாயனார் குருபூஜை. புராண விரிவுரை திருமதி. மீனாட்சிசுந்தர சிவை.

29—11—70 நிலைய மன்றத்தின் மாத வழிபாடும், சமயப் பிரசாரமும், ஸ்ரீ கச்சபேசுவரர்கோயில் அரண்மனைக்காரத்தெரு, சென்னை 1 .(மாலை 5 மணி)

30—11—70 மூர்க்க நாயனார் குருபூஜை. புராண விரிவுரை, தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான்.

1—12—70 திருக்கடவூர் மூன்ருவது சோமவார 1008 சங்காபிஷேகப் பிரசாதம் வழங்கும் விழா. தலைவர் உயர்நீதிபதி கனம் N. கிருஷ்ணசாமி ரெட்டியார்.
சிறப்புலி நாயனார் குருபூஜை புராண விரிவுரை. திரு. ப. வடிவேல் பிள்ளை.

6—12—70 ஞாயிறு வாரச்சொற்பொழிவு, சிவானந்தலகரி ஆங்கீரச திரு. S. வேங்கடேச சர்மா.

( தொடர்ச்சி 694 ஆம் பக்கம் பார்க்க )

---

குறிப்பு :— நிகழ்ச்சிகள் மாலை 7 மணிக்குத் தொடங்கப் பெறும்.

தருமையாதீனத்துக்குச்சொந்தமான புள்ளிருக்குவேளூர்

## ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

## மகாகும்பாபிஷேக விழா மலர்

தென்னாட்டில் மிகச் சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குவது புள்ளிருக்குவேளூர். இறைவன், தீராநோய் தீர்த்தருள்கின்ற வைத்தியநாதனாக விளங்குகிறான். முருகன் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி என்ற திருப்பெயரொடு விளங்கிவருகின்றார். சமயகுரவர் முதலிய அருளாளர்கள் பாடிப் பரவிய திருத்தலம். இத்தலத் திருக்கோயிலைத் தருமையாதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இராஜ கோபுரங்கள், விமானங்கள் முதலிய அனைத்தையும் புதுப்பித்து 2—7—69 அன்று ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். கும்பாபிஷேக விழாவின் சிறப்பு மலர் இது. இம்மலர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களது வாழ்த்துரையுடனும், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் முதலியோர் வழங்கியருளிய வாழ்த்துச் செய்திகளுடனும் வெளிவந்துள்ளது.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், திருமுறை, சாத்திரம், தோத்திரம், இலக்கியம், கலை, சமயம், வாழ்வியல், திருக்கோயில், மருத்துவம், கல்வெட்டு ஆகிய பல தலைப்புக்களில் அறிஞர்கள் பலர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இம்மலரை அணிசெய்கின்றன. டிம்மி 1 x 4 ஆர்ட் படங்கள் வெள்ளை கிளேஸ் காகிதங்கள். பக்கங்கள் 534.

விலை ரூ 14—00. பதிவஞ்சல் கட்டணம் ரூ. 4—00.

கிடைக்குமிடம் :— டிரஷரர். ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், வைத்தீஸ்வரன்கோயில், தஞ்சைமாவட்டம், தமிழ்நாடு.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—11—70